## பொருளடக்கம்




சிலம்பு-கடு ] ஈசுவர—வைகாசி [பரல்-௰

## திருநாவுக்கரசு அடிகள்

### கோயில் பெரிய திருத்தாண்டகம்

காரொளிய திருமேனிச் செங்கண் மாலுங்
கடிக்கமலத் திருந்தயனுங் காணா வண்ணஞ்
சீரொளிய தழற்பிழம்பாய் நின்ற தொல்லைத்
திகழொளியைச் சிந்தைதனை மயக்கந் தீர்க்கு
மேரொளியை யிருநிலனும் விசும்பும் விண்ணு
மேழுலகுங் கடந்தண்டத் தப்பால் நின்ற
பேரொளியைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.

பதவுரை:—

காரொளிய திருமேனிச் செங்கண்மாலும்—கருநிறத்தோடு கூடிய ஒளிபொருந்திய அழகிய உடலையும் செந்தாமரை மலர் போலுஞ் சிவந்த கண்களையுமுடைய திருமாலும்,

கடிக்கமலத்து இருந்து அயனும் காணாவண்ணம்—நறுமண முடைய வெண்டாமரைமேல் வீற்றிருந்துள்ள நான்முகனும், அடியும், முடியும் தேடியும் அவர்கள் காண எட்டாதிருக்கும் தன்மை யுடைய,

சீர் ஒளிய தழற் பிழம்பாய் நின்ற திகழ் தொல்லை ஒளியை—திருந்திய ஒளியுள்ள தீப்பிழம்பாய் அவர்களிருவர் நடுவிலே நின்றதும் ஒளிர்கின்ற பழமையாயுள்ளதுமாகிய இன்ப ஒளியாயும் (ஆநந்த ஒளியாயும்),

சிந்தைதனை மயக்கம் தீர்க்கும் ஏர் ஒளியை—(தன்னையே நாடித் தேடிக் கொண்டிருக்கும் அடியார்களுடைய) சிந்தையில் அவர்கள் தன்னைப்பற்றி நினைந்துகொண்டிருக்கும் மயக்க அறிவை முற்றிலும் நீக்குகின்ற அழகான அருள் ஒளியாயும்,

இருநிலனும் விண்ணும் ஏழுலகும் விசும்பும் கடந்து அண்டத்து அப்பால் நின்ற பேரொளியை—பெரிய நில உலகம், விண்ணுலகம். முதலிய ஏழுலகங்களையும் அவற்றின் திசைகளையுங் கடந்து அவற்றிற்கு அப்பாலாயுள்ள அண்டப்பரப்பையும் தாண்டி நிற்கிற தூவெளி (ஞானாகாச) ஒளியாயும்,

பெரும்பற்றப் புலியூரானை—தில்லையில் திருக்கோயில் கொண்டருளியிருக்கும் கூத்தப்பிரானை,

பேசாத நாள் எல்லாம் பிறவா நாளே—மக்களாகிய நாம் நமது வாழ்நாளில் நினைந்து அவன் புகழைப் பேசி வணங்காத நாள்களெல்லாம், அவை தோன்றிய நாள்களாயிருந்தும், பயனில்லாது கழிந்த வீண் நாள்களேயாகும்.

விளக்கவுரை:—

கார் ஒளிய திருமேனிச் செங்கண்மால்—திருமால் கார்நிற வண்ண மேனியையும் செந்தாமரை மலர்போலும் சிவந்த கண்களையுமுடையன் ஆதலின் அவனை அடிகள் 'காரொளிய திருமேனிச் செங்கண்மால்' என்றார்.

கடிக்கமலத்து இருந்து அயனும்—இருந்துள்ள என்பது, இருந்து எனக் குறைந்துநின்றது. தாமரை மலர்போன்ற உலகத்திலிருந்துகொண்டு படைப்புத் தொழில் செய்கிறவன் நான்முகன் என்பார், 'கடிக்கமலத்திருந்து அயனும்,' என்று உருவகமாய்க் கூறினார். தத்துவங்களாலாகிய உலகைத் தாமரை மலருக்கு ஒப்பிட்டிருத்தலை, சிவஞானபோதம் 9-வது சூத்திரம் "மண்முதலாமலர்" என்ற முதற் குறிப்பு வெண்பாவாலறிக.

சீர் ஒளிய தழற் பிழம்பாய் திகழ் தொல்லை ஒளியை—இது, திருமால் அயன் இருவர்களில் ஒவ்வொருவரும், யான்பெரியன், யான் பெரியன் என்று தங்களுக்குள் தருக்கிப் பூசலிட்டபொழுது, அவர்களின் நடுவே சிவபெருமான் அவர்களுடைய செருக்கை அடக்கும் பொருட்டுத் தனது அடியும் முடியும் காணாவண்ணம் தழற்பிழம்பாய் நீண்டு வளர்ந்து நின்ற சிவபுராண வரலாற்றைக் குறிக்கிறது. இப்பாட்டிற் கூறப்பட்டிருக்கிற மூன்று ஒளிகளுள் இது "ஆதியு மந்தமுமில்லா அரும்பெருஞ் சோதி" (ஒளி) ஆதலின் இதனை அடிகள் 'திகழ் தொல்லை ஒளி' என்றார்.

திருமூலர் இந்த ஒளியைத் திருமந்திரத்தில் "தானந்தமாமேனி நின்ற தனிச்சுடர்" (2081) என்றும், "போறியாத பெருஞ்சுடர்" (109) என்றும், "ஆனந்தத்துள்ளொளி" (126) என்றும், "கரையற்ற

சோதி" (134) என்றும், "பேரொளியாய்ப் பெரிய பெருஞ் சுடர்" (1375) என்றுங் கூறுகின்றார். மாணிக்கவாசக அடிகள் இந்த ஒளியை "ஆநந்த மாக்குமென்சோதி" (395) என்றும் "முழுச்சோதி" (434) என்றும் "பெரிய வரிய பரஞ்சோதி (649) என்றும் கூறுகின்றார்.

சிந்தைதனை மயக்கம் தீர்க்கும் ஏர் ஒளியை—உலகம் அசத்தாயுள்ள பொய்ப்பொருள் என்பதைப்பற்றியும் சிவம் சத்தாயுள்ள மெய்ப் பொருள் என்பதையும் பற்றியும் அடியார்கள் தங்கள் சிந்தையிலே கொண்டுள்ள சிறு ஐயந்திரிபுகளை அடிகள் இங்கே 'மயக்கம்' என்று கூறினார். அடியார்கள் தங்கள் ஞானாசிரியன்பால் பதி பசு பாச உண்மைகளைக் கேட்டறிகிற அறிவிலும் கேட்டறிந்த உண் மைகளைச் சிந்தித்தறியும் அறிவிலும் மெய்யறிவோடு சிறிதளவு கருவி அறிவும் கலந்திருப்பதாலும், கருவி அறிவு சிறிதும் கல வாத மெய்யறிவிலன்றி முற்றிலும் அடியார்களுடைய சிந்தையி லுள்ள ஐயந்திரிபுகள் நீங்கா ஆகலானும், அடிகள் 'சிந்தைதனை மயக்கந் தீர்க்கும் ஏர் ஒளியை என்றார். தெளிதல் அறிவிலே தான் கருவி அறிவு முற்றிலும் சிந்தையைவிட்டு நீங்கிவிடுகிறது. சிவபெருமான், முப்பொருள்களின் உண்மைகளை ஞானாசிரியன் பால் கேட்டுச் சிந்தித்த அடியார்களுடைய சிந்தையைச் சிறிதும் ஐயந்திரிபுகளின்றித் தெளிவித்தல் இங்கே கூறப்பட்டது.

ஆன்மா தெளிதல் அறிவிலேதான் சிறிதளவும் அந்தக்கரணங்க ளோடும் கூடி அறியாதிருக்கின்றது என்ற உண்மையைச சிவ நேயர்கள் சிவஞான சித்தியார் 8-வது சூத்திரம் "அறியாமை அறிவகற்றி" என்ற முதற் குறிப்புப் பாட்டினாலறிக. இதனா லன்றோ மாணிக்கவாசக அடிகளும் திருவாசகம் கண்டபத்து முதலாவது பாட்டில் "சிந்தை தனைத்தெளிவித்துச் சிவமாக்கி எனையாண்ட அந்தமிலா வானந்தம்" என்றும், அச்சோப்பதிகம் முதலாவது பாட்டில் "சித்த மலமறுவித்துச் சிவமாக்கி யெனை யாண்ட அத்தன்" என்றும் கூறி யருளினார்! இதனால் ஆன்மாப் பேரின்ப மடைதலுக்குச் சிவமாதலும், சிவமாதற்குச் சிந்தைமல முற்றிலும் நீங்கித் தெளிதலும் இன்றியமையாதன என்பது தெளிவு.

ஏர் ஒளி—ஏர் என்பது அழகு. ஒளி என்பது இங்கே அடியார்க ளுடைய தகராகாச சிந்தையில் விளங்கும் அருள் ஒளியைக் குறிக்கிறது. ஞான சத்தியாகிய அருட்சத்தியானவன் அடி யார்களுடைய பக்குவமறிந்து அப்பக்குவத்துக்குத் தக்கவாறு அருள்செய்தலால், 'ஏர்ஒளி' யென்றார். ஓர் சிற்பன் தான் செய்த கல்லுருவத்தில் அதன் உறுப்புக்களெல்லா மொன்றுக் கொன்று பொருந்திய அளவுடன் செய்தலினாலே அதனை வெளி அழகு படச் செய்கின்றான். இறைவன் உயிர்களுடைய பக்குவமறிந்து அவற்றிற்குத் தக்கவாறு தண்ணருள் புரிகின்றவன் ஆதலின் அவனை 'அறவாழி அந்தணன்' (அழகிய தட்பமுடையவன்) என்று

தெய்வப்புலமைத் திருவள்ளுவர் கூறினர். உயிர்கள் நற்பய னடையும்படி அவற்றினுடைய பக்குவத்துக்குத் தக்கவாறு அருள் செய்யும் உள் அழகு இங்கே 'ஏர்' என்ற சொல்லால் குறிக்கப் பட்டது.

இந்த அருளொளியைத் திருமூலர் திருமந்திரத்தில் "நெஞ்சு நிறைந் தங்கிருந்த நெடுஞ்சுடர்" (2094) என்றும் "சீரொளியாகித் திகழ் தரு நாயகி" (1375) என்றும், "உள்ளநிந்துள்ளே உயிர்க்கின்ற ஒண்சுடர்" (1797) என்றும். "அன்புறு சிந்தையின்மேலெழு மவ்வொளி" (282) என்றும், "உள்ளத்தொருவனை உள்ளுறு சோதியை" (431) என்றும், கூறுகின்றார். மாணிக்கவாசக அடி கள் இந்த ஒளியை "துண்ணென வென்னுள் மன்னிய சோதி" (641) என்றும், "அருட்டுறை யளிக்குஞ் சோதி" (604) என்றுங் கூறுகின்றார். திருநாவுக்கரசு அடிகள் திருவாரூர்த் திருத் தாண்டகம் முதலாவது பாட்டில் (245—1) "சுடரொளியாயுள் விளங்கு சோதி" என்று இவ்வொளியைக் கூறுகின்றார்.

இருநிலனும் விண்ணும் ஏழுலகும் விசும்பும் கடந்து அண்டத்து அப் பால் நின்ற பேரொளியை—இருநிலனும் விண்ணும் என்ற இரண்டு உலகங்கள் கூறப்பட்டபின் ஏழுலகம் என்று கூறப்பட் டதனுல் இருநிலன் விண்முதலிய ஏழுலகம் என்று உரை செய் யப்பட்டது.

விசும்பு என்பது இங்கே திசை. அண்டம் என்பது ஏழுலகங்களையும் தன்னகத்தே கொண்டு விளங்கும் முட்டை வடிவான அண்டப் பரப்பு. இந்த ஒளி ஞானகாச ஒளி அல்லது தூவெளி ஒளி என்று கூறப்படும். இஃது அண்டத்துக்குக் காரணமாயிருப்பதால் அண்டவொளி என்றும் கூறப்படும்.

இந்தத் தூவெளியிலிருந்து உலகங்களெல்லாந் தோன்றி அதிலே ஒடுங்குகின்றன. இந்தத் தூவெளி ஒளியிடம் இரவு பகலில்லாத இடமாகும். இந்த ஒளியைத் திருமூலர் திருமந்திரத்தில் "அண் டங்களேழுங் கடந்தகன் றப்பாலும் உண்டென்ற பேரொளி" (2388) என்றும். "அண்டவொளியும் கண்டவொளியுடன்" (2806) என்றும் "உலகாய் நின்ற ஒண்சுடர்" (2081) என்றும் "தானே உலகுக்குத் தண்சுடராய் நிற்கும்" (1978) என்றும் கூறு கின்றார்: திருநாவுக்கரசு அடிகள் "ஒரு சுடரா யுலகேழுமானுன் கண்டாய்" (253-10) என்றும் "உலகுக்கொரு விளக்காய் நின் ருன்" (249-3) என்றும் கூறுகின்றார்.

இந்தத் தேவாரப் பாட்டில் தூவெளி ஒளி (ஞானகாச ஒளி), அருள் ஒளி, ஆநந்த ஒளி என்ற மூவொளிகள் கூறப்பட்டிருக்கின்றன. திருமூலர் திருமந்திரத்தில் மேலே கூறப்பட்டபடி ஒவ்வொரு ஒளியையும் வேறுவேறு பாட்டுக்களிற் கூறியிருத்தலோடு மூவொளிகளையும் சேர்த்து 2081-வது பாட்டில்,

"தானந்த மாமென நின்ற தனிச்சுடர்,
ஊனந்த மாயுலகாய் நின்ற ஒண்சுடர்"—என்று கூறுகின்றார்.

திருஞானசம்பந்த அடிகள் திருவையாறு பதிகம் எ-வது பாட்டில் "உலகெலாஞ் சோதியாய் நிறைந்தான், சுடர்ச் சோதியுட் சோதி" என்றும்,

திருநாவுக்கரசு அடிகள் சித்தத்தொகைத் திருக்குறுந்தொகைப் பதிகம் 3-வது பாட்டில் "பாதிபெண்ணுருவாகிய பரஞ்சுடர் சோதியுட் சோதியாய் நின்ற சோதியே" என்றும்,

ஒரு பாட்டில் மூன்று ஒளிகளையும் கூறுதல் காண்க.

இறைவன் இந்த மூவொளிகளையு முடையவன் என்று திருமூலர் 221 வது பாட்டில்,

ஒண் சுடரானை யுலப்பிலி நாதனை
யொண் சுடராகி யென்னுள்ளத் திருக்கின்ற
கண்சுடரோனுல கேழுங் கடந்தவத்
தண்சுடரோமத் தலைவனுமாமே

என்று கூறுகின்றார்.

திருமூலர் இறைவனுடைய முச்சொரூபத்தைச் சொல்லும்பொழுது உலகமொடுங்குங் காலத்தில் மூன்று ஒளிகளுமொன்றும் என்று 2480-வது பாட்டில்,

"உலகம் புடை பெயர்ந்தூழியும் போன
நிலவு சுடரொளி மூன்று மொன்றாய்
பலவும் பரிசொடு பான்மை யனீசன்
அளவும் பெருமையு மாரறி வாரே" என்று கூறுகின்றார்.

அவர் அருட்சத்தியாகிய பூரணசத்தியைச் சொல்லுங்கால், 1148-வது பாட்டில்,

நவிலும் பெருந்தெய்வ நான் மறைச் சத்தி
துகிலுமை யாடை நிலம்பொதி பாதம்
அகிலமு மண்ட முழுதுஞ் செம்மாந்து
புகலுமுச்சோதி புனைய நிற்பானே" என்று கூறுகின்றார்.

இதனாலே பாட்டின் 4-வது அடியிற் கூறப்பட்ட பேரொளியாகிய தூவெளியானது பாசமொடுங்குகிற ஒளி யென்றும், 3-வது அடியிற் கூறப்பட்ட "ஏரொளியானது" பசு (ஆன்மா) அடங்குகிற அருளொளி என்றும், இரண்டாவது அடியிற் கூறப்பட்ட தொல் ஒளியானது அவ்வருளொளி அடங்குகிற இறைவனுடைய முழுஒளி என்றும், உலகம் தோன்றும்பொழுது இறைவனுடைய முழு ஒளியிலிருந்து அருளொளி அதனின்றும் வேறுபடாமற் பிரிந்து தூவெளி ஒளியோடு கலந்து உலகிலுள்ள நானாவித உருவங்களையுடைய உலகமாக விரியுமென்றும், உலகமொடுங் கும்பொழுது இம்மூன்று சோதிகளுமொன்றும் என்றும் நாம் அறியலாம்.

இன்னும் இறைவன் சச்சிதானந்த சொரூபத்தன். இந்த முச்சொரூபங்களில் சத்துக்கு ஆதாரமாயுள்ளது பாட்டிற்கூறப்பட்ட பேரொளியாகிய தூவெளி ஒளி என்றும், சித்துக்கு ஆதாரமாயுள்ளது ஏரொளியாகிய அருளொளி என்றும், ஆநந்தத்துக்கு ஆதாரமாயுள்ளது தொல் ஒளியாகிய முழுஒளி என்றும் நாம் அறியலாம். சத்தாவது பதி பசு பாச மூன்றுக்கு முரியது; சித்து பதி பசு இரண்டிற்கு முரியது; ஆநந்தம் பதிக்கு மாத்திர முரியது.

இதனால் பதிபசுபாச மூன்றும் அநாதிநித்தியப் பொருள்களென்பதும் பதியாகிய சிவமொன்றே ஒரு பொருளினையுஞ் சாராது என்றும் ஒருதன்மைத்தாயுடைய அநாதிநித்திய வியாபக அறிவுடைய இன்பப் பொருள் என்பதும், உயிரில்லாத பாசமானது பதியைச் சார்ந்ததன் காரண நிலையில் அநாதி நித்திய வியாபகப் பொருள் என்பதும், உயிர்ப்பொருளாகிய பசு, பாசத்திலிருந்து நீங்கித் தன்முனைப்பு விட்டுப் பதியை அடைந்தபொழுது அநாதிநித்த வியாபக அறிவுப்பொருளாய்ச் சிவத்துக்குரிய பேரின்பத்தை அடைகிறது என்பதும், பதி பசு பாச முப்பொருள்களும் ஒடுக்க நிலையில் பதியாகிய சிவத்திலடங்கும் என்பதும் நன்குவிளங்கும்.

இக்கருத்தைத் திருமூலர் திருமந்திரம் 2410-வது பாட்டில்,

நாடும் பதியுட னற்பசு பாசமு
நீடுமா நித்த நிலையறி வாரில்லை
நீடிய நித்தம் பசுபாச நீக்கமும்
நாடிய சைவர்க்கு நந்தி யளித்ததே—என்றும்,

தாயுமான அடிகள் 542-வது பாட்டில்.

சித்துஞ் சடமுஞ் சிவத்தை விடவில்லையென்ற
　நித்தன் பரமகுரு நேசத்தாற்—சுத்தநிலை
பெற்றோமே நெஞ்சே பெரும்பிறவி சாராமற்
　கற்றோமே மோனக் கரு" என்றும் கூறுதல் காண்க.

இங்ஙனம் ஆன்மாப் பேரின்பமடைதற்கு இப்பாட்டிற் கூறப்பட்டிருக்கிற மூவொளிகளும் வாயில்களா யிருத்தலால் அவ்வொளிகளாய் விளங்கும் கூத்தப்பிரானை மக்களாகிய நாம் நாடோறுந் தவறாது வழிபட்டு உய்தல்வேண்டும் என்ற கருத்தை அடிகள் இப்பாட்டிற் கூறியருளினர்.

மா. வே நெல்லையப பிள்ளை.

---

## பிழை திருத்தம்

"செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு கஙி: பரல். கூ.

### தேவார உரை

பக்கம் சஉக வரி-39

| பிழை | திருத்தம் |
|---|---|
| அறிவு | அருள் |

# இலக்கணமும் இலக்கியமும்:
# LANGUAGE AND LITERATURE

## பாடலியும் தமிழ் நூல்களும்

[வித்வான் திரு. மா இராசமாணிக்கம் P. O. L.]

சோணையாறும் கங்கையாறும் கலக்கும் இடத்தில் அமைக்கப்பெற்ற அரண்மிகு நகரம் பாடலி. அதனை நிருமித்தவன் சைசுநாக வமிசத்தரசனான (பிம்பிசாரன் மகனான) 'அஜாதசத்ரு' என்பவன். அவன் காலமுதல் அந்நகரம் மகத ராச்சியத்தின் தலைநகரமாக விளங்கியது. ஆனால் அஃது உலகப் புகழ்பெற்றது மோரியர் காலத்தேதான்; பின்னர்க் குப்தர் காலத்தேயும் புகழுடன் விளங்கியது. இந்நகரம் சுமார் கி. மு. 500-க்குச் சிறிது முன் கட்டப்பட்டதென உத்தேசமாகக் கோடல் தவறாகாது. சைசுநாக வமிசம் கி. மு. 400-உடன் அழிந்துவிட்டதாகச் சரித்திரம் கூறுகிறது.

### பாடலியும் நந்தரும்

சைசுநாக வமிசத்தார் ஆட்சியை ஒழித்து மகதராச்சியத்தை ஆண்ட முதல் அரசன் மஹாபத்ம நந்தன் என்பவன். அவன் கோசலை, அவந்தி முதலிய நாடுகளைப் பிடித்து மகத ராச்சியத்தை விரிவாக்கினான்.[2] இவனுக்குப்பின் எண்மர் பாடலியை ஆண்டதாகக் கூறப்படுகிறது. 'நவநந்தர்' என்பவர் இவரே. இந்நவ நந்தர் காலத்தில் பாடலி சிறப்புற்று விளங்கியதாகத் தெரிகிறது. இவ்வேந்தரைப் பற்றித் தமிழர் நன்கறிந்திருந்தனர் என்பது மாமூலனார் பாடல்களால் விளக்கமாகும். தமிழகத்து வணிகர் வேதகாலத்திருந்தே வடநாட்டாரோடு வாணிபம் செய்து வந்தனர் என்பது வேதங்களில் புகழ்ந்து கூறப்பட்டுள்ள 'முக்தா' (முத்தம், முத்து) என்ற தமிழ்ச்சொல்லாலும், ஓடா (ஓடம்) முதலிய சொற்களாலும், அவர்கள் பலவற்றுக்கும் பயன்படுத்திய பொன், தந்தம் முதலியவற்றாலும் நன்கறியலாம்.[3] பின்னர் இராமாயண காலத்தில் வட நாட்டார் தமிழகம் வந்ததும்,

1. C. S Srininvasachari's 'A History of India' p. 24 (2 ed.)
2, V. A. Smith's 'Oxford History of India' p. 58 (2 ed.)
3. P. T. S. Aiyangar's 'History of the Tamils', pp. 21-26.

பாரதகாலத்தில் அர்ச்சுனன் பாண்டியன் மகளை மணந்ததும் சஹதேவன் தமிழரசரிடம் திறைபெற்றுச் சென்றதும் பாரதப்போரில் மூவேந்தர் கலந்துகொண்டதும் போல்வன தமிழகத்துக்கும் வடநாட்டுக்கும் உள்ள நெருங்கிய தொடர்பை நன்கு விளக்குவனவாகும். 'வடுகர்' எனவும், 'வடவடுகர்' எனவும், 'வடுகர் -தேயம்' எனவும் தொகைநூற் பாடல்களில் வருஞ் சொற்கள் தமிழர், வடுகர் தேயத்தையும் அவர் நாட்டுக்கப்பாற்பட்ட 'வடவடுகர்' [1a] —மகதராச்சியத்தார் தேயத்தையும் நன்கறிந்தவர் என்பதும், இச்சொற்களைப் பிரிவாற்றுத் தலைவி கூறுவதாகவும், தோழி ஆற்றுவதாகவும் பிறவாறும் வருங் குறிப்புகளையும் நோக்க, அக்காலத் தமிழர் வடுகரோடும் வட வடுகரோடும் புரிந்துவந்த வாணிபம் இனிது விளங்குவதாகும். எனவே, நெடுங்காலமாக இங்ஙனம் வடநாட்டாருடன் நடைபெற்றுவந்த வாணிபம் நந்தர் காலத்தும் நடைபெற்று வந்தது, மோரியர் காலத்தும் நடைபெற்று வந்தது என்பதில் வியப்பில்லை. இது நிற்க.

"நீகண் டனையோ? கண்டார்க்கேட் டனையோ ?
ஒன்று தெளிய நசையினம் மொழிமோ ;
வெண்கோட் டியானை சோணை படியும்
பொன்மலி பாடலி பெறீஇயர்
யார்வாய்க் கேட்டனை காதலர் வரவே ?"[2]

என வரும் செய்யுளில் பாடலி நகரம் சோணையாற்றின் அணித்தென்பதும், பொன்மலிந்த பாடலி என்பதும் காணத்தக்கன.

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடு கண்டு தோழி அவளை அகங்குழைய அணைத்து, "உன் தலைவர் நந்தன் செல்வம் பெறுவதாயினும் அங்குத் (வாணிபம் செய்யச் சென்ற இடத்தே) தங்கலர் ; விரைவில் வருவார் ; நீ கவலையுறுதே" எனக் கூறுமுகத்தான் 'நந்தன் செல்வச் சிறப்பைக் கூறுதல் கண்டு மகிழத் தக்கது :

"நந்தன் வெறுக்கை பெறினும் மற்றவண்
தங்கலர் வாழி தோழி"[3]

'நந்தர் பல்புகழ் எய்தியவர் ; போர்களிற் சிறந்தவர் ; அவர் காலத்தே அவர்தம் தலைநகராய பாடலி சீர் மிகுந்திருந்தது' என்னும் செய்தி கீழ்வரும் அடிகளால் அறியலாம் ;

---

1a Purananuru, 378; மகதராச்சியம் கி. மு. 550 முதல் கி. பி. 500 வரை சிறப்புற்றிருந்ததென்பது சரித்திரங்கூறும் சான்று.
2. Kurunthokai , 75
3. Agananuru , 251

"பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்
சீர்மிகு பாடலி.................1

கங்கையாற்றில் கரந்த செல்வம் :

இத்தகைய பாடலியை யாண்ட முதல் நந்தனான மகா பத்ம நந்தன் என்பவன் கங்கையாற்று நீரைத் தேக்கி இடையே மணலைத் தோண்டி அங்குண்டான குழியில், தான், பல வகையினும், சேமித்த பெருநிதியை ஐந்து பெட்டிகளில் (கோசங்களில்) இட்டு அவற்றைப்புதைத்து மேலே ஈயத்தை உருக்கி வார்த்து மூடிவிட்டான்; பின்னர் முன்போல நீரை ஓடவிட்டான். (இவ்வேலையில் ஈடுபட்ட ஏவலர் இரகசியம் வெளியிடுவர் என்றெண்ணி அவர்களைக் கொன்று விட்டதாகவும் கூறப்படுகிறது.) இதுவே அகம்—265 கூறுவதாகும். "தலைவனைத்தாழச் செய்தது, நந்தர் நீர் முதல் (அடியில்) கரந்த (மறைத்துவைத்த) செல்வமோ?" எனத் தலைவி தோழிக்குக் கூறினாள் என்பதே பொருந்துவது. இது கன்னட மொழியில் வரையப்பட்டுள்ள **"சந்திரகுப்த—சக்கரவர்த்தி"** என்னும் நூலின் 7-ம் பக்கத்தில் காணத்தக்கது.

"பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்
சீர்மிகு பாடலிக் குழீஇக் கங்கை
நீர்முதல் கரந்த நிதியங் கொல்லோ?"2

இதன் பொருள்: "பல்புகழ் நிறையப்பெற்ற வெல்லும் போரைச்செய்யும் நந்தர், தமது சிறப்புமிகுந்த பாடலியிடத்துக் கூடிக் கங்கைநீரின் அடியில் மறைத்துவைத்த நிதியோ (தலைவனைத் தாழச் செய்தது)?"

வேறு கருத்து :

இவ்வடிகளில் வரும் செய்தி, பாடலிபுரம் கங்கையாற்றில் அழிந்தது எனப் பொருள் படுவதாகக்கொண்டு இது பாஹியானுக்குப் பின்னும் (சுமார் கி. பி. 405) ஹிவான்ஸ்வாங்கிற்கு முன்னும் (கி. பி. 635) நடந்ததாகும், அதனையே மாமூலனார் குறித்தனர் எனப் பண்டிதர் மு. **இராகவையங்கார்** அவர்கள் கூறினர். அம்முடிபே பொருந்துவதாக விஜய நகரம் அரசர்—கல்லூரிச் சரித்திரப் பேராசிரியராகிய திரு M. S. இராமஸ்வாமி ஐயங்கார் அவர்கள் கூறியுள்ளார்.3

---

1. Ibid , 265
2. Aganauru , 265
3. Vide his 'Studies in South Indian Jainism', pp. 124, 125

(சங்க காலம் கி. பி. 5-ம் நூற்றுண்டு என்பதற்கமைந்த காரணங்களுள் இதுவும் ஒன்றுகும் என்றும் கூறியுள்ளார்.)

## இம்முடிபு பொருந்துவதா?

இம்முடிபுக்கு மாமூலனர் அடிகள் இடந்தரா என்பதைப் பேரறிஞர் நன்குணரக்கூடும். அப்பொருள் படுவதாகக் கொண்டே இதனை ஆராய்வோம்: பாஹியான் இந்தியா வந்தது 5-ம் நூற்றுண்டின் தொடக்கத்திலாகும் (கி. பி. 399—414) [1]. ஹிவான்ஸ்வாங் இந்தியா வந்து இருந்தது 7-ம் நூற்றுண்டின் முதற் பாதியிலாகும் (கி. பி. 629—645) [2]. இவை இரண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் (கி. பி. 415—628) பாடலிக்குற்ற அழிவையே மாமூலனர் குறிப்பதாயின் 'நந்தர் பாடலி' எனக் கூறுவானேன்? பாடலியை உண்டாக்கியவன் கி. மு. 550-ல் வாழ்ந்த சைசுநாக வமிசத்து அரசனை 'அஜாதசத்ரு' என்பது சரித்திரங்கண்ட உண்மை. அந்நகரம் உலகப் புகழ்வாய்ந்த நகரமாகப் பெருஞ் சிறப்போடு விளங்கியது சிறப்புற்ற மோரியர் காலத்திலும் குப்தர் காலத்திலுமே (கி. மு. 322—கி. மு. 232; கி. பி. (300—500). பாடலியை உண்டாக்கியவன் பெயரைப் புணர்த்தி 'அஜாதசத்ரு பாடலி' என்றேனும், உலகப்புகழ் பெற்று இருந்ததற்குக் காரணபூதர் என்ற காரணம் பற்றி 'மோரியர் பாடலி' என்றேனும், இன்னர் பாடலியாக இந்நகரம் விளங்கியபோது இவ்வழிவு ஏற்பட்டது என்பதைக் குறிக்க (குப்தர் காலத்தில் அவ்வழிவேற்பட்டிருந்து அதனையே குறிப்பது மாமூலனர் கருத்தாயின்) 'குப்தர் பாடலி' என்றேனும் கூறியிருந்தால், அதற்கு மேற்கண்டவாறு பொருள் வலிந்து கொள்ளினும் பொருந்தும். மாமூலனர் கி. பி. 5-ம் நூற்றுண்டில் நடந்த அழிவைக்கூறுவதாயின், 'குப்தர் பாடலி கங்கையாற்றில் அழிந்தது' என்றல்லவோ கூறியிருத்தல் வேண்டும்? அங்ஙனம் கூருமல் கி. பி. 5-ம் நூற்றுண்டில் நடந்த அழிவினை, அதற்குச் சுமார் 800 வருடங்கட்கு முற்பட்ட 'நந்தர் பாடலி' என 'நந்தரைத்தொடர்புபடுத்துக்கூறி, அதன் செல்வம் கங்கையாற்றில் மறைந்தது என வற்புறுத்துக் கூறுவானேன்? மோரியரை (மௌரிய வமிசத்தவரை)ப் பற்றி விளக்கமாகக் கூறும் மாமூலனர்,

> "பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்
> சீர்மிகு பாடலி"

---

1. Vide 'The Travels of Fa-Hian' by James Legge.
2. Vide 'Yuan Chwang's Travels in India' by Thomas Wattars.

எனத் தெளிவாக—ஐயத்திற்குச் சிறிதும் இடமின்றிக் கூறியிருப்பதும் நாம் மேற்கூறிய வரலாற்றையே குறிப்ப தாகும் என்பது ஈண்டு மீண்டும் உணரத்தக்கது.

"நந்தர், பாடலியை யாண்ட செய்தியை மட்டுமே தமிழர் உணர்ந்திருந்தனர்; பிற்காலத்தில் அந்நகரத்தைப்பற்றி ஏதுமே அறிந்திலர். எனவே, பிற்காலத்திய அழிவினை 'நந்தர் பாடலி அழிந்தது' எனக் கூறியிருத்தலும் இயலாதோ?" எனக் கடாவின், அஃதும் இயைவதன்று. என்னை? சந்திர குப்தன் அமைச்சனான சாணக்கியன் தான் எழுதிய அர்த்த சாஸ்திரத்தில் "தமிழகத்திலிருந்து இரத்தினங்கள், சேர நாட்டு வைடூரியங்கள், கருநிறமுள்ள பாண்டிநாட்டுச் சால் வைகள், மதுரை மஸ்லின் துணிகள் முதலியவை சந்திரகுப் தன் பொக்கிஷசாலைக்கு அனுப்பப்பட்டன"[1] என்பதி லிருந்து தமிழர் மகதநாட்டாரோடு வாணிபம் புரிந்தமை நன்குணரலாம். சந்திரகுப்தன் கி. மு. 322—கி. மு. 298 வரை ஆண்டவன். அக்காலத்தில் வாணிபம் செய்த தமிழர் 'பாடலியில் மோரியர் ஆட்சி நடந்தது' என்பதை அறியாமல் இருந்தனர் எனக் கூற இயலாது. கூறின், அறிவுடை உலகம் நகைக்கும். எனவே, நாமறிந்தவரை, தமிழர் 'நந்தர் பாடலி' யைக் கண்டிருந்தனர்; 'மோரியர் பாடலி'யையும் கண்டிருந் தனர் என்பதை முறையே மாமூலனார் கூற்றைக்கொண்டும் சாணக்கியன் அர்த்த சாஸ்திரத்தைக் கொண்டும் நன்கு ணரலாம். மேலும், நந்தர்க்குப் பின் வந்த 'மோரியர் தமிழ கத்தின்மீது படையெடுத்தனர்' என்பது மாமூலர் பாக்களால் அறியலாம்[2]. நந்தரைப்பற்றிக் கூறும் செய்யுளிலேயே மாமூல னார் மோரியர் படையெடுப்பையும் விளக்கமாகக் கூறுதல் கவனித்தற்குரியது. அம்மாமூலனாரே 'நந்தர் பாடலியின் செல்வம் கங்கையாற்றில் கரந்துள்ளது எனப் பிறிதோர்செய் யுளில் கூறியுள்ளார். இவ்வுண்மைகளைப் பகுத்தறிவும் தமிழ் நூலறிவும் உடையோர் நன்கறிதல் கூடும்.

மோரியரே தமிழகத்தின்மீது படையெடுத்தவர் என்பதைத் தமிழ்மக்கள் நன்குணர்ந்தனர் என்பது கீழ்வரும் பல புலவர் அடிகளால் அறியக்கிடக்கும் அருஞ் செய்தியாகும்;

1. "கனைகுரல் இசைக்கும் விரைசெலற் கடுங்கணை
முரண்மிகு வடுகர் முன்னுற மோரியர்
தென்திசை மாதிரம் முன்னிய வரவிற்கு."[3]

1. P. T. Sirninvasa Iyangar's 'History of the Tamil's', pp. 141, 142.
2. Agananuru, 251, 281.
3. Agam, Mamulanar, 281

2. "மோகூர், பணியா மையின் பகைதலை வந்த
மாகெழு தானை வம்ப மோரியர்"[1]

3. "விண்பொரு நெடுவரை இயறேர் மோரியர்
பொன்புனை திகிரி திரிதரக் குறைத்த."[2]

4. "வென்வேல்,
விண்பொரு நெடுங்குடைக் கொடித்தேர் மோரியர்
திண்கதிர்த் திகிரி திரிதரக் குறைத்த."[3]

இந்நான்கனுள் இரண்டாவதன்கண் வரும் 'வம்ப மோரியர்' என்ற தொடரைக்கொண்டு, "மோரியர் தமிழகத்தின்மீது படையெடுத்திலர்; குப்தர் தங்களையும் மோரியர் எனக் கூறிக் கொண்டமையின், அவர்களைப் 'புதிதாக வந்த மோரியர்' என்னும் பொருள்பட மாமூலனார் 'வம்ப மோரியர்' என்று குறிப்பிட்டார்" என மேற்சொன்ன அறிஞர் இருவரும் கொண்ட முடிபால், 'நந்தர் பாடலி'யைக் 'குப்தர் பாடலி' என்றும் கூற நேர்ந்தது. இதன் உண்மையை—'வம்ப மோரியர் யாவர்?' என்னும் பேருண்மையை—அடுத்த இதழில் ஆராய்வோம்.

---

## பனையும் பழந்தமிழ் நூல்களும் பிறவும்

[மூளாய் சைவப்பிரகாச வித்தியாசாலைத் தலைமை ஆசிரியர்

பண்டிதர் ஸ்ரீமத் கா. பொ. இரத்தினம் அவர்கள்.]

(௪௫௬—ஆம் பக்கத் தொடர்ச்சி)

அகப்பொருணூல்களில் மடலேறுதல் என்றோர் செய்தி கூறப்படுகிறது. மடலேறுதலாவது: தலைமகன் ஒவ்வாக் காமத்தால், பனைமடலால் குதிரையும் பனைமரத்துள்ளவற்றால் வண்டி முதலியவுஞ் செய்து அக்குதிரைமீதேறுதல் என்பர்.

"தென் புலியூரீசன் சாந்துமெருக்கு மணிந்தோர்
கிழிபிடித்துப் பாய்சினமா வெனவேறுவர்
சீறூர்ப் பனைமடலே"

என்பது திருக்கோவையார்.

---

1. Ibid ,, 251
2. Ibid. Parankottranar 69
3. Puram, Kallil Athiraiyanar, 175

அன்றில் எனும் பறவை பனையில்தான் வாழ்வதாம். "என்றும் நீக்கமற அன்றில் பெடையொடு வாழ்வதன்றோ பனையாவதுவே" என்பது திருவெங்கைக் கோவை. "செயலார் குடம்பையில் செந்தலையன்றிச் சினையுள" என்பது தஞ்சைவாணன் கோவை.

"வெள்ளாங் குருகின் பிள்ளையும் பலவே
அவையினும் பலவே சிறுகருங் காக்கை
அவையினும் அவையினும் பலவே குவிமட
லோங்கிரும் பெண்ணை மீமிசைத் தொடுத்த
தூக்கணங் குரீஇக் கூட்டுள சினையே"

இச்செய்யுள் குருகு, காகம், தூக்கணங்குருவி முதலியனவும் பனையில் வாழ்வனவாகவும் பனையிலேயே கூடுகட்டி முட்டையிட்டுக் குஞ்சுபொரிப்பனவாகவும் கூறுகிறது.

"கல்லெறியும் கவண் வெரீப்
புள்ளிரியும் புகர்ப் போந்தை"

என்பது பட்டினப்பாலை. 'குவிமடலோங்கிரும் பெண்ணை' என்பது ஔவையின் பனையின் உருவத்தைச் சித்திரிக்கிறது. அதிவீரராமபாண்டியரும் தாமியற்றிய வெற்றிவேற்கையில்,

"தேம்படுபனையின் திரள்பழத் தொருவிதை
வானுறவோங்கி வளம்பெற வளரினும்
ஒருவர்க்கிருக்க நிழலாகாதே"

என்று பனையினுயரமும், பனம்பழத்தின் இனிமையும், உருவமும், பிறவும் தோன்றக் கூறியிருக்கின்றார்.

"தினைத்துணை நன்றிசெய்யினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார்"

எனவும்,

"தினைத்துணை யாங்குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார்"

எனவும் திருவள்ளுவரும் பனையைத் திருக்குறளில் எடுத்தாண்டது அதன் தோற்றப் பெருமை கருதியேயாகும். தினை, பனை என்பன சிறுமை பெருமைகட்குக் காட்டுவன சிலவளவை.

"தினையனைத்தே யாயினுஞ் செய்தநன் றுண்டால்
பனையனைத்தா வுள்ளுவர் சான்றோர்"

என்ற நாலடியாரையுங் காண்க.

"கடையாயார் நட்பிற் கமுகனைய ரேனை
இடையாயார் தெங்கி னனையர்—தலையாயார்
எண்ணரும் பெண்ணைபோன் றிட்டஞான் றிட்டதே
தொன்மை யுடையார் தொடர்பு."

என்ற நாலடியார்ச் செய்யுளில் உவமையாக எடுத்தாளுமுகத் தானே கமுகு, தென்னை, பனை இவற்றின் வேற்றுமையும் பெருமையும் தோன்றக் கூறப்பட்டிருக்கிறது. 'இட்டஞான் றிட்டதே' எனுந் தொடர் பனை இலேசில் உண்டாகு மாற்றை விளக்குகின்றது. பனம் வித்தை இட்டவளவிலேயே நாங்கள் அதன் பயனை எதிர்பார்க்கலாம் என்றால் பனையின் பெருமை யையும், மற்றைய புல், மரம் முதலியவற்றிலும் பார்க்க அதற் குரிய தனிச் சிறப்பையும் எடுத்துரைத்த லொண்ணுமா? நட் பினரில் தலையாயாருக்கே யன்றி, ஈதலிலும் தலையாயார்க்குப் பனையை ஒப்பிட்டிருக்கிறார்கள்.

"உத்தமர்தா மீயுமிடத் தோங்குபனை போல்வரே
மத்திமர்தாந் தெங்குதனை மானுவரே—முத்தலரும்
ஆங்கமுகு போல்வர் அதம ரவர்களே
தேங்கதலியும் போல்வர் தேர்ந்து"

எனும் நீதிவெண்பாச் செய்யுளைக் காண்க.

முற்காலத்தில் சிறியோரும், பெரியோரும், புலவர்களும், அரசர்களும், ஆண்களும், பெண்களும் கள் குடித்த வரலாறு களைப் புறநானூறு முதலிய சங்க நூல்கள் எடுத்துரைக் கின்றன.

"சிறிய கட்பெறினே எமக்கீயுமன்னே
பெரியகட்பெறினே யாம்பாடத் தான்மகிழ்ந்துண்ணுமன்னே"

எனுமடிகள் ஔவையார் அதிகமான் நெடுமானஞ்சியைப் புகழ்ந்து பாடிய செய்யுளில் காணப்படுவன. அரசர்களுக்குப் பல சித்திர வேலைப்பாடமைந்த பொன்வள்ளங்களில் தாதியர் களால் கள்ளூட்டப்பெற்றது. கள்ளைக் குடித்துச் செருக்கி யும், மயங்கியும், பலர் அறிவிழந்த செய்திகளுமுண்டு. பனங் கருக்கினால் மீனைச் சுட்டுண்டு அதனுடன் கள்ளையுங் குடித்து மகிழும் வழக்கமும், பனங்கள்ளுடன் ஆமை யிறைச்சியை யுண்ணும் வழக்கமும் அக்காலத்தி லிருந்தன. கள்ளை வடிக் கப் பன்னாடையை உபயோகித்தனர். கள்ளுண்டோர் புளிச் சுவையை அதிகம் விரும்புவர். இன்னும் பல வரலாறுகளைப் புறநானூறு கூறுகிறது. விரிப்பிற் பெருகு மாதலின் விடுக் குதும்.

"தலையோர் நுங்கின் தீஞ்சேறு மிசைய
இடையோர் பழத்தின் பைங்கனி மாந்தக்
கடையோர், விடுவாய்ப் பிசிரொடு சுடுகிழங்குநுகர
நிலமலர் வையத்து வலமுறை வளைஇ
வேந்து பீடழித்த ஏந்துவேல் தானையோடு"

என்பது சோழன் நலங்கிள்ளியை ஆலத்தூர் கிழார் எனும் அருந்தமிழ்ப் புலவர் பாடிய செய்யுளின் முதற் பகுதியாகும். நுங்கையும் பனம்பழத்தையும் பனங்கிழங்கையும் தின்றார்கள் என்ற விரிவான செய்தி இதில் குறிக்கப்பட்டுளது. நலங்கிள்ளியின் சேனையின் தொகையையும் அது ஓரிடத்தைக் கடந்து செல்லுதற்குரிய காலத்தையும் உணர்த்தவே சேனையின் முதலிற் செல்வோர் நுங்கை அருந்துவர் என்றும், இடையில் செல்வோர் பனம்பழம் தின்பர் என்றும், கடையில் செல்வோர் சுட்ட பனங்கிழங்கைச் சாப்பிடுவர் என்றுங் கூறினர்.

"இரளரைப் பெண்ணை நுங்கொடுபிறவும்"

என்பது பெரும்பாணாற்றுப்படை.

"முண்டகக் கோதை ஒண்டொடி மகளிர்
இரும்பனையின் குரும்பை நீரும்
பூங்கரும்பின் தீஞ்சாறும்
ஓங்கு மணற் குவவுத் தாழைத்
தீநீரோடுடன் விராஅய்
முந்நீருண்டு"

எனும் புறநானூற்றடிகளால் நுங்கின் நீரோடு கருப்பஞ் சாற்றையும், தெங்கின் இளநீரையும் கலந்துண்ணும் வழக்கமுண்டென்பது பெறப்படுகிறது. பனங்குருத்தையும் சுவைக்கும் வழக்கம் உண்டு எனவும், அலங்கரிக்கப் பனையோலையையும் உபயோகித்தனர் எனவும், பனந்தோட்டுடன் வேங்கை, வெட்சிப்பூக்களையும் சேர்த்துத் தலையில் அணிவர் எனவும், இன்னும் பல வரலாறுகளையும் புறநானூறு கூறுகிறது. இறந்த யானைகளுக்குப் பனந்துண்டங்களையும், வரால் மீனுக்குப் பனை நுகும்பையும், பனை அரைக்கு முழாவையும், பனங்கருக்குக்கு அரத்தையும், உவமையாக அந்நூலில் கூறப்பட்டிருக்கிறது. யானையின் தும்பிக்கைக்குப் பனையை ஒப்பிட்டு "இரும்பனையன்ன பெருங்கையானை" எனக் கூறப்பட்டிருக்கிறது. திருநாவுக்கரசு நாயனாரும் "பனைக்கை மும்மதவேழ முரித்தவன்" என்றார். 'பனங்குடை' எனும் ஓர் சொல் புறநானூறு, அகநானூறு, கலித்தொகை, நாலடியார் முதலிய நூல்களிற் காணப்படுகிறது. அஃது பனையோலையாற்

செய்யப்பட்டு உண்கலமாகவும், குடிகலமாகவும் பாவிக்கப் பட்டது. "வேணீருண்ட குடையோரன்னர்" எனும் கலித்தொகை அடிகளுக்குத் தண்ணீர் வேட்கையாலே கோலித் தண்ணீர் குடிக்கப்பட்ட எச்சிலாற் பயன்படாத குடை ஓலையை ஒப்பர் என நச்சினார்க்கினியருரைத்தலால் அஃது நம் நாட்டினுள்ள பிழாவையோ பட்டையையோ ஒத்த தெனக் கூறலுஞ் சாலும்.

(தொடரும்)

---

## கழிநெடிலடி இரட்டை ஆசிரிய விருத்தம்

[காழி. ப அ. முத்துத்தாண்டவராய பிள்ளை.]

அங்கிங்கெ னாதபடி யெங்கும்ப் ரகாசமா
யானந்த பூர்த்தி யாகி
யருளொடு நிறைந்தெது தன்னருள் வெளிக்குளே
யகிலாண்ட கோடி யெல்லாந்
தங்கும் படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
தழைத்ததெது மனவாக் கினிற்
றட்டாம னின்றதெது சமயகோ டிகளெலாந்
தந்தெய்வ மெந்தெய்வ மென்
றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவு நின்றதெது
வெங்கணும் பெருவழக் காய்
யாதினும் வல்லவொரு சித்தாகி யின்பமா
யென்றைக்கு முள்ள தெதுமேற்
கங்குல்பகலற நின்றதெது வெல்லையுள தெதுவது
கருத்திற் கிசைந்த ததுவே
கண்டன வெலா மோன வுருவெளிய தாகவுங்
கருதியஞ் சலிசெய் குவாம்.

அருணகிரிநாதர் வேல் விருத்தமும், மயில் விருத்தமும், சிவப்பிரகாச சுவாமி, குமரகுருபர சுவாமி, தாயுமான சுவாமி, சிவஞான சுவாமி, இராமலிங்க சுவாமி முதலியோர் எழுதிய நூல்களிற் சில விருத்தங்களும் ஆசிரிய விருத்தத்தில் பதினான்கு சீர்பெற்று முதலிரண்டு சீரும் ஒரு பக்கும், இடை இரண்டு சீரும் ஒரு பக்கும், கடை மூன்று சீரும் ஒரு பக்குமாகப் பிளவுபட்டுவரும். பாடசாலைகளில் மாணாக்கர்கள் அறப்பளீசுர சதகம் முதலிய சதகங்களையும், மஹாநவமியில் ஊர்வலம் வரும்போது ஜயவிஜயீபவ எனப் பாடிவரும் பாடல்களையும், கிராமங்களில் அமர்ந்துள்ள தெய்வங்களின் மேல் தோத்திரமாகப் பாடிவரும் பதிகங்களையும் கவனித்

தால் இவ்வாறு பிளவுபட்டு வருதல் புலப்படும். இப்போது கிடைக்கும் இவ்வகை விருத்தங்களில் முற்பட்டவை ஆந்திர பாஷையிலும் வல்ல டிண்டிமகவி அருணகிரிநாதர் பாடியன. இப்பாடலில் ஒவ்வோர் அடியும் இரண்டு அடியாக நான்கு வரியில் எழுதப்படும். ஒன்று மூன்று வரிகளில் நான்கு சீரும், இரண்டு நாலு வரிகளில் மூன்று சீரும் அமைந்திருக்கும். முதல் நான்கு சீரும் ஐந்து மாத்திரை அளவுள்ள ஒரு கணத்தால் அமைந்த நான்கு நான்கு சீர் உள்ளன. அவ்வாறே ஐந்தாம் சீரும் அமையும். ஆறு ஏழு சீர்கள் இரண்டும் சேர்ந்து ஏழு மாத்திரை அளவு உச்சரிக்கும். அரையடியில் ஒன்றுக்கும் ஐந்துக்கும், கூடுமாஞல் ஒன்று, மூன்று ஐந்துக்கும் மோனைவரின் நயமாகவிருக்கும். மாத்திரை கணக்கிடும்போது குற்றெழுத்துக்கள் தனித்தனி ஒரு மாத்திரையும், நெடில் தனித்தும் ஒற்றடுத்தும் குறில் ஒற்றடுத்தும் வரின் இரண்டு மாத்திரையும் ஒலிக்கும். ஒரு கணம் ஆதாவது ஒரு சீரில் தனதான தானதன என்பன போல மூன்றிடத்து விட்டொலிக்கும். அவை நெட்டெழுத்திலாவது ஒற்றடுத்த குற்றெழுத்திலாவது முடியா. ஈரசையில் நான்கு மாத்திரை அளவினதாக தாஞதனஞ தானன என்னும் சந்தத்தில் முடியுமாஞல் அடுத்த சீர் தனிக் குற்றெழுத்தில் ஆரம்பித்தல் வேண்டும். ஏழாவது சீர் பல்பால்பா என இரண்டு மாத்திரையிலும் ஆருவது சீர் நான்கு மாத்திரையாக இருப்பின் பால என்றுற்போல மூன்று மாத்திரை பெற்றும் வரும். சீரின் முதலசை ஐகாரத்திலும் ஔகாரத்திலும் குறிலோடிணைந்த ஒற்றிலும் தொடங்குமாயின் அவ்வசை இரண்டு மாத்திரை அளவாகவே யுச்சரிக்கப்படும். மற்றும் வண்ணப்பாக்களில் கண்டபடி ஒற்றெழுத்துக்கள் அரை மாத்திரை கால் மாத்திரையாகவே சீரிடைக்கண் ஒலிக்கும். மகரக்குறுக்கம் முதலிய குறுக்கங்களும் அறிகுறி பெருத உயிரளபெடை, ஒற்றளபெடைகளும் ஏற்றபெற்றித் தத்தமக்குரிய மாத்திரைகளைப் பெற்றுவரும். ''ஐயகின் சென்னிமிசை யுறைகின்ற மடமங்கை'' இவ்வடியில் சீரொன்றுக்கு ஐந்து மாத்திரையும் மொழி முதல் ஐகாரம் இரண்டு மாத்திரையும் ஏனைய ஐகாரங்கள் ஒன்று ஒன்றரை மாத்திரையும், ''கௌமாரி'' என்பதில் மொழி முதல் ஔ இரண்டு மாத்திரையும் கல்லேனும் என்பதில் கல் இரண்டு மாத்திரையும் கங்குல்பகல் என்பதில் குல் ஒரு மாத்திரையும் பெற்று வருவதைக் காண்க. ரகரவொற்று ஒரு சீரில் முதலசையாக அர் என ஒற்றடுத்து வாராது; அவ்வொற்று எவ்விடத்தும் மாத்திரை பெருது.

"பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற பரிபூர ஞானந்தமே." இவ்வடியில் முதல் அறுசீரும் ஐயைந்து மாத்திரையும் ஏழாஞ்சீர் இரண்டு மாத்திரையும் நிரம்பி ரகர வொற்று அலகு பெறுமல் வருதல் காண்க. யழள ஒற்றுக்களுக்கும் மகர வகர வொற்றுக்களின் மிசைவரும் நகர வொற்றுக்கும் இஃதொக்கும்: "கண்மூடி யொருகணமிருக்க வென் ருற்பாழ்த்த கன்மங்கள் போராடுதே" என்னும் அரையடியில் விதிப்படி முப்பத்திரண்டு மாத்திரையும், ழகர ளகரங்கள் குறுகிய ஓசையும் பெற்று வந்தன. பரோட்சை ஞா என்னும் சீரில் குறில் நெடில் ஒற்றடுத்து வந்த முதல் அசையில் முதற்கண்நின்ற குற்றெழுத்து விட்டு இசையாமல் சிறுபான்மை அருகி மாத்திரை பெறுமலே வரும் இவ்வடிகளையே இரட்டித்து 28 முதல் 224 வரையில் சீருள்ள விருத்தங்களாகப் பெரியோர் பாடியிருக்கின்றனர். அறுசீரில் மாமாகாய் மாமாகாய் என்னும் கட்டளையை இரட்டித்து 12, 24 முதலியனவாகவும்,விளம்மா விளம்மா விளம்விளம்மா என்பதை இரட்டித்து 14, 28 சீர்களாகவும் வரும் இரட்டையாசிரியங்கள் சில நூல்களிற் பயின்று வருகின்றன.

---

# குறுந்தொகை

## மூலமும் விளக்க உரையும்

[இலங்கையடிகள் வித்வான் இரா. சிவ. சாம்பசிவன்]



### பாலை

*தலைவன் தலைவியை உடன்கொண்டு சென்றுழை, அதனைத் தோழியால் செவிலித்தாய் அறிந்து தேடிக் காணுளாய் வருந்திக் கூறியது.*

வெள்ளிவீதியார் பாடியது

44. காலே பரிதப் பினவே; கண்ணே
நோக்கி நோக்கி வாளிழந் தனவே
அகலிரு விசும்பின் மீனினும்
பலரே மன்றவிவ் வுலகத்துப் பிறரே.

என்பது இடைச்சுரத்துச் செவிலித்தாய் கையற்றுச் சொல்லியது.

பதவுரை:—

காலே—என் கால்களோ எனில், பரிதப்பின—விரைந்து செல்லுதலைத் தவிர்ந்தன; கண்ணே—கண்களோ எனில், நோக்கி நோக்கி—பார்த்துப் பார்த்து, வாள் இழந்தனவே—ஒளியை இழந்தன. இ உலகத்து—இந்த உலகத்தில், பிறர்—உடன்சென்றவரைத் தேடி வருந்தாதவர், அகல் இரு விசும்பின் மீனினும்—பரந்த பெரிய வானத்தில் காணும் நட்சத்திரங்களினும், பலரே—பலராவர்; மன்ற—நிச்சயம்.

பரி—செலவு, நடத்தல். தப்பல்—தவறல். வாள்—ஒளி. பிறர் என்றது தன்னைப்போல் உடன்சென்றாரைத் தேடிச்சென்றவர். இரு விசும்பு - பெரியவான்—இருமை—கருமை, பெருமை. மீன்—மின்னுவது என்னும் காரணப் பொருளது.

பரி—செல்லுதல் என்பதை "வண்பரி நெடுந்தேர் பூண்க நின் மாவே" என்பதனுனு மறிக. பரி - முதனிலைத் தொழிற்பெயர்.

## மேற்கோள் விளக்கம்:—

1. "காலே பரிதப்பின.........பிறரே"

"செவிலி கடத்திடைத் தன் நெஞ்சிற்குச் சொல்லியது"

—(தொல். அகத். நச். பக். 115)

2. "காலே பரிதப்பின.........பிறரே"

—"எனவருவது சுரத்திடை வினவியது நிகழ்ந்த பின்னர்க் கூறியது" —(தொல். அகத். இளம். சூ. 40 உரை)

3. 'வாள் ஒளியாகும்'—என்பதற்கு, "கண்ணே நோக்கி நோக்கி வாளிழந்தனவே" என்பது மேற்கோள்.

—(தொல். சொல். இளம். சூ. 361)

"கண்ணே நோக்கி நோக்கி வாளிழந்தனவே"—இதனோடு

(அ) "கோல வெற்பினன், மாலை வண்டின மாலைக்கண் கொண்டவே" —சீவக. 2397

(ஆ) "வாளற்றுக் கண்ணுங் காட்சி தவ்வின" —நற். 397

(இ) "வெளிறு கண்போகப் பன்னாட்டிரங்கி" —புறம். 177

'அகலிரு விசும்பின்'

1. 'அகலிரு விசும்பினானும்' —புறம். 8-9.

2. 'விசும்பின் மீனினும்' —புறம். 25-1.

'மீன்திகழ் விசும்பு' புறம். 7

இச்செய்யுள், 'செவிலி, புதல்வியைக் காணது கவலை கூர்தல்' என்பதற்கு மேற்கோள்:— (நம்பியகப். சங்கம்)

மெய்ப்பாடு—அழுகை.
பயன்—ஆற்றுமை நீங்குதல்.

## மருதம்

புதுப் புனலாடப் பரத்தையரோடு சென்ற தலைவன், தன்பாங் காயினரால் தோழியை யணுகிப் புலந்து நின்ற தலைமகளைப் புலவி திருத்துமாறு வேண்டி நிற்பத் தோழி, தலைவியை யணுகி ஊடல் தணிவித்து வாயில் நேர்ந்தது.

ஆலங்குடி வங்கனர் பாடியது

45. காலை யெழுந்து கடுந்தேர் பண்ணி
வாலிழை மகளிர்த் தழீஇய சென்ற
மல்ல லூர னெல்லினன் பெரிதென
மறுவருஞ் சிறுவன் தாயே
தெறுவ தம்மவித் திணைப்பிறத் தல்லே.

என்பது தலைமகற்குப் பாங்காயினர் வாயில் வேண்டியவழித் தோழி வாயில் நேர்ந்தது.

பதவுரை:—

காலை எழுந்து—காலைப்பொழுதில் எழுந்து, கடும்தேர் பண்ணி—விரைவுடன் செல்லும் தேரைச் சிறக்கச் செய்து கொண்டு, வால் இழைமகளிர்—சிறந்த அணிகளை அணிந்த பொதுமகளிரை, தழீஇய சென்ற—தழுவிக்கொண்டு புதுப் புனலாடச் சென்ற, மல்லல் ஊரன்—வளப்பமுள்ள (செல்வ முற்ற) ஊரையுடைய மருதநிலத்தலைவன், பெரிது எல்லினன் என—மிகவும் விளக்க முற்றவன் என்று, மறுவரும்—மனம் வருந்துகின்ற, சிறுவன் தாயே—சிறுவனது தாயாகிய தலைவியே, இத்திணைப் பிறத்தல்—இந்த உயர்குடியில் பிறப்பதானது, தெறுவது—கோபித்துத் தள்ளத்தக்கது. அம்ம—வியப்பிடைச்சொல்; முன்னிலையசையுமாம்.

தலைவன் பரத்தையரோடு புதுப்புனலாடி மீண்டுவந்தானாயினும் பாங்காயினரைக்கொண்டு தலைவன், பரத்தையரைத் தேரேற்றிச் சென்று பொய்கைகளில் நீராடல் புரியும் தன்மையினன் என்று அவனை இழித்துக் கூறுவாளாய்த் தோழி, தலைவி ஊடினளென அவள் ஊடலைத் தணிக்கும்பொருட்டுப் பரத்தையர்பால் மருவி ஒழுகிய தலைமகன் அனுப்பிய வாயில்கட்கு

"நற்றேர்ப் பொய்கையூரன் கேண்மை" என்று (குறுந். 61) கூறியிருத்தலும் உணரற்பாலது.

முனிதல் என்பது வெறுத்தல்.

"காலையெழுந்து ... ...தல்லே"—எனக் குடிப்பிறத்தலை வெறுத்தவாறு காண்க. —(தொல். இளம்பூ. மெய்ப் 326 பக்.)

வாயில் வேண்டி நிற்கின்றானாதலின் நாமும் இசையவேண்டிய தாகவுள்ளது. இதற்குக் காரணம் நற்குலத்தில் பிறந்தமையே. இத் தகைய பிறப்பு வெகுளத்தக்கது என ஊடல்தோன்றத் தோழி வாயி லுக்கு இசையுமாறு கூறினள். இதனால் உயர்குடிப் பிறந்தார்க்குப் புலவி நீட்டம் தக்கதன்றெனக் கூறியவாறும். சிறுவன், தந்தையின் செய்கை யறியாது தலைவனை அணையச் சேர்தலைக்குறித்துச் 'சிறுவன் தாயே' எனக்குறித்தார் என்க.

வால்—சிறந்த. மல்லல்—செல்வம், வளப்பம். பண்ணுதல்—ஏற்பவமைதல். எல்வினன்—விளக்க முற்றவன். மறுவரல்—மனம் வருந்தல். மறுக்கம், மறுகுதல்—மனம் குழம்புதல். தெறுதல்—வெகு ளல். திணை—குடி. பிறத்தல்லே—பிறத்தலே—விர்த்தல் விகாரம்.

மேற்கோள் விளக்கம்:—

மருதத்திற்குக் 'காலை'ப்பொழுது வந்ததற்கு இச்செய்யுளின் முத லடி மேற்கோள். —(தொல். அகத்—பக் 21)

2. "தலைவன் பிறழ்ந்த இடத்து அவன்சென்றுசேரும் தகைமை இல்லாமைக்குக் காரணமாகிய புலவியின்கண் அழுந்திய தலைவி பக் கத்தனாய் நின்று அவள் புலவியைத் தீர்த்தற்கண்ணும் தோழி கூற்று நிகழ்த்தற்குரியள்" என்பதற்கு இச்செய்யுள் மேற்கோள். —(தொல். கற்பி. பக் 695.)

3. "தலைவியையும் தலைவனையும் உயர்த்துக் கூறும் கூற்றும் தோழிக்கு ஒரோவிடத்து உரியவாம்" என்பதில் தலைவியை உயர்த் திக் கூறியதற்கு இச்செய்யுள் மேற்கோள். —(தொல். பொருளி. பக் 850)

4. "காலை எழுந்து......தல்லே" என்பது "புறம்படு விளையாட் டுப் புல்லிய புகர்ச்சியும்" என்பதற்கு மேற்கோள். —(தொல். கற்பு. இளம்பூ. பக் 253)

5. 'சிறுவன் தாயே'—'புதல்வன்தாய்' —(குறுந். 8.)

6. 'பண்ணுதல்'—"புலவர், பூநுதல்யானை யொடுபுனை தேர் பண்ணவும்" —(புறம். 12)

1. 'வாலிழை மகளிர்த் தழீஇய'

(அ) 'வாலிழை மகளிர்க்கழீ இய'

(ஆ) 'வாலிழை மகளிர்த்தரீ இய'—பிரதிபேதம்.

மெய்ப்பாடு—இளிவரலைச் சார்ந்த பெருமிதம்.

பயன்—வாயினேர்தல்.

---

# ஆராய்ச்சிப் பகுதி : Research

## நுண்ணறிவு பெருக நூல்நிலையம் வேண்டும்

*தமிழறம் பேணும் தகைமையாளர்*
[திரு உ. அரு. அருணாசலம் செட்டியார்.]

உலகில் மக்கள் உய்யவேண்டுமெனின் நுண்ணறிவு பெருகவேண்டும். அதற்கு உள்ளம் விரியவேண்டும். உள்ளம் விரிந்தால் நலமா? தீதா? இரண்டுமுண்டு.

"உளமெனப் படுவதோ அளவிலாப் பெருவெளி
கோட்டை யுமில்லை பூட்டுதா ழதற்கிலை
நஞ்சே யனைய பஞ்சேந் திரியம்
அஞ்சோ வாயில் ஆயிர மாயிரம்
அரைநொடி யதனுள் நரகென நம்முளம்
மாற்றிடக் கணந்தொறும் வருந்தீ நினைவோ
சாற்றிடக் கணித—சங் கேதமே யில்லை
இப்பெரு விபத்தி லெப்படிப் பிழைப்பீர்—"

என்று மனோன்மணீயத்திற் கூறியபடி உடல் இருக்க உள்ளம் எங்கெங்கோ சென்றுலாவக் கூடியது. அவை ஐம்பொறி வேட்கையுட்பட்டு மாறான வழிகளிற் செல்லுமேல் அதனால் விளைவது தீதே. ஆண்டவன் மக்களுக்கு ஐம்புலனைத் தந்தது அதனின்பத்தைப் பெறவேண்டித் தானே என்பது சிலரது துணிபு. அது உண்மை. அப்புலன்கள் எவ்வின்பத்தை அடைய வேண்டும்; எவ்வழிச்சார வேண்டுமென்பதை ஒவ்வொருவரும் முன்னர் ஆராயவேண்டும்.

ஆராய்ந்து புலன்களின் விருப்பிற்கேற்ப நமது புத்தியைச் செலுத்தாது,

"சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு"

என்ற செந்நாப்போதார் திருவாக்கின்படி மனத்தை அது சென்ற புலத்தின்கட் செல்லவிடாது, அதனால் விளையும் நன்மை தீமைகளை ஆராய்ந்து, தீயவை நீக்கி நல்லவைகளில் அப்புலன்களைச்செலுத்த நாம் பழகவேண்டும். அவ்வாறு ஐம்புலன்களையும் அடக்கியாள்பவரே அறிவிற் சிறந்தோராவர்; ஆன்மலாபத்தைப் பெறுவர்; அரிய பிறவியின் பயனையடைவர். அருந்தவஞ் செய்வோருக்கு மேலாய் வாழ்வர்

இதை,

"புலனைந்தும் வென்றான்றன் வீரமே வீரம்"

என ஔவையாரும்

"உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து"

எனப் பொய்யில் புலவரும் விரித்துரைத்திருக்கின்றனர். அவ்வுண்மைகளை நாமுணர்ந்து அதன்படி நடக்கவேண்டுமெனின், ஆண்டவன்றிருவருளடைய வேண்டுமெனின், அறிவு வளர வேண்டும்.

அறிவு வளர்வதற்கு, உள்ளத்தைப் பெருக்குவதற்கு,

"தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு"

என்ற தமிழ்மறைப்படி அருங்கல்வியைக் கற்றுக் கேட்டுத் தெளிந்தாற்றான் பலனுண்டு. கல்வி கற்பதெனின் இக்காலத்தில் இலகுவில் இயலுமா? கல்வியெனுங் கடலை இப்பிறப்பின் வாழ்நாள் முழுதும் எவ்வகையால் நீந்தினுங் கரையேற முடியுமா? முடியாது! "கல்வி கரையில கற்பவர் நாட்சில" என்ற முதுமொழிப்படியும், கல்வி யென்னும் பல்கடற்பிழைத்தும்" என்ற திருவாசகப்படியும் கல்வியோ கணக்கில. அதனை நம்போன்றார் கூடியவரை அறிய ஆன்றோரால் ஆன்வரை வரிவடிவாலாக்கப் பெற்றுப் பல நூல்களாக வெளிவந்திருக்கின்றன. அந்நூல்களை அறிஞர் பல்லோர் அவரவர் ஆராய்ச்சித் திறனுக்கேற்ப விரித்திருக்கின்றனர். இன்னும் பெருக்கிவருகின்றனர்.

அந் நூல்கள் அத்தனையையும் அல்லது ஏதேனும் ஒரு பகுதியையேனும் நாம் வாங்கிக் கற்கமுடியுமோ? அதற்குக் காலமும் போதாது. எல்லோரிடமும் பொருளுமில்லை. பொருள் படைத்தோர் வாங்கலாம். அவர்களிற் சிலருக்கு மனமில்லை. மனமிருந்தாலும் பொருள் வளர்ச்சி கருதவே நேரமிருக்கும். மாபேறளிக்கும் மனத்தூய்மையை வளர்க்க காலம் கிடைக்காது. அறிவை வளர்க்கக் கருதுவோரில் அநேகருக்கு அதற்குறுதுணைபுரி நூற்களை வாங்கப் பொருள் கிடைக்காது. இவர்களிருபிரிவினரும் ஒருங்கே இன்பம் பெற, ஆன்மலாபமடைய, அறிவை வளர்க்க வழி காண வேண்டுமெனின் ஒவ்வொரு ஊரிலும் ஓர் பெருத்த, நூல் நிலையம் வேண்டும்

அதனில் ஒவ்வொருவரும் அங்கத்தினராகச் சேர வேண்டும். அதன் வளர்ச்சி கருதி,

"நிதி மிகுத்தவர் பொற்குவை தாரீர்
நிதி குறைந்தவர் காசுகள் தாரீர்
அதுவு மற்றவர் வாய்ச்சொ லருளீர்
ஆண்மை யாளர் உழைப்பினை நல்கீர்—"

என்ற பாரதியார் வேண்டுகோட்படி அவரவரும் இயன்ற அளவு ஈந்து ஏற்ற தொண்டாற்ற வேண்டும்.

இந் நாளில் எதுவும் பொருளின்றே லியலாது. எடுத்ததற் கெல்லாம் பணம் வேண்டும். இதையே "பொருளில்லார்க் கிவ் வுலகமில்லை" என்றும்

"பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள்"

என்றும் வள்ளுவர் பெருமானும் கூறிப் போந்தார். ஆகவே எல்லாவற்றினும் இவ்வுலகிற் சிறப்புச்செய்யும் பொருளீ வோரே மிகுதியும் வேண்டும். நூல் நிலையங்களுக்கு வழங்கும் பொருள் நிதிபடைத்தோருக்கு ஒரு பொருட்டல்ல.

"வாங்குங் கவளத் தொருசிறிது வாய்தப்பின்
றூங்குங் களிறோ துயருறா—ஆங்கது கொண்
டூரு மெறும்பிங் கொருகோடி யுய்யுமா
லாருங் கிளையோ டயின்று"

என்று குமரகுருபரர் கூறியபடி உணவுண்ணும் யானையின் வாய்க்குத் தப்பிய ஒரு கவளம் பல உயிர்களைக் காப்பது போல், பொருளாளர் வைப்புநிதிக் கேகும் பணத்தில் ஒரு பகுதி ஈவதால் ஒன்றுங் குறைந்துபோகாது. அப்பொருள் பல நூல்களை வாங்குவதற்காகி வறுமையால் வாடும் அறிஞருள்ளத் தருளமுதைப் பொழிகிறது. அதனாலவர்கள் ஆனந்தம் பெறுகின்றனர். எடுத்த பிறவியின் பயனை யெய்து கின்றனர். ஆகவே,

அருநிதி படைத்தோ ரதிகம்பொருளீந்து அறிஞர்களுந் தொண்டாற்ற முன்வந்தால் ஆன்றோரா லாக்கப்பெற்ற நூல்கள், அறிஞர்களா லாக்கப்பெறு நூல்கள் அத்தனையையும் வாங்கி நூல் நிலையத்தில் சேர்க்கலாம்; அதைக்கொண்டு அனைவோரும் நுண்ணறிவு பெருக்கலாம்; நூற்பயனை யடையலாம். ஆகவே,

"ஒண்ணுதற் செவ்வா யுமையவள் பங்க னுலகளிக்குங்
கண்ணுதற் பெம்மான் கழலிணை போற்றிக் களிப்புறவே
எண்ணுவோர்க் கின்பம தீந்திடு கல்வியு மின்னருள்சேர்
நுண்ணறி வும்பெற நூல்நிலையம் பல நோக்குவிரே"

என்ற கலித்துறைப்படி நூல் நிலையம் இல்லாத ஒவ்வொரு ஊரிலும் இன்றே ஏற்படுத்த முன்வாருங்கள்.

# வரலாற்றுப் பகுதி: History & Biography

## கம்பரும் வள்ளுவரும்

(௬அ-ஆம் பக்கத் தொடர்ச்சி)

### மக்கட்பேறு

தசரதசக்கரவத்தி ஸ்ரீராமபிரானுக்கு முடிசூட்ட எண்ணித் தம்பிடமழைத்து தம்மார்புறத் தழுவி மனமகிழ்ந்து தன் பக்கத்து இருக்கச்செய்து 'போர்மழுவுடையவன் பெரும் புகழ் குறுக நீண்ட தோளினாய்! நிற்பயந் தெடுத்தயான் நின்னை வேண்டி விரைந்து எய்துவதொன்றுளது'; அது, பன்னாள் பூபாரத்தைத் தாங்கி யிளைப்புற்ற நிலைமையில் மூப்பும் மிகுதியாகத் தோன்றியதனால், இப்பாரத்தினின்று நீங்கி உய்யலாவதோர் நெறிபுக உதவிடவேண்டியதேயாகும். மைந்த! ஒருவன் மைந்தரைப் பெறுவது தான் உறுதுயர்நீங்கி இருமையின்பங்களையும் பெறுதற்பொருட்டாகும் என்று சொல்வது பெரியோர்களது இயற்கையாகும். ஆதலினால் அரிதினில் உரிமையாக உன்னைப்பெற்ற யான் தளர்வது தகவோ? துன்பத்தினின்றும் நீங்கியவர்கள் இவ்வுலகத்தவரும் விண்ணுலகத்தவரும் மாதவருமல்லர், தன் சொன்மறாத மகப்பெற்றவரே துயர் துறந்தாராவர்,

> "உரிமை மைந்தரைப் பெறுகின்ற துறுதுயர் நீங்கி
> யிருமை யும்பெறற் கென்பது பெரியவ ரியற்கை
> தரும மன்னநிற் றந்தயான் றளர்வது தகவோ
> கரும மென்வயிற் செய்யிலென் கட்டுரை கோடி"

> "மன்னர் வானவ ரல்லர்மேல் வானவர்க் கரசாம்
> பொன்னின் வார்கழற் புரந்தரன் போலிய ரல்லர்
> பின்னு மாதவந் தொடங்கினோன் பிழைத்தவர் பிறரார்
> சொன்ம றாமகற் பெற்றவ ரருந்துயர் துறந்தார்"

என்று மக்கட்பேற்றின் அருமைபெருமைகளைப் பாராட்டிக் கூறினார்.

உலகத்திலே ஒருவனால் அடையற்பாலனவாய அரிய பேறுகள் அனைத்துள்ளும் அறிவுமுதலாய நலன்கள் பல அடைதற்குரிய மக்களைப்பெறும் பேற்றினும் மிக்கபேறு பிறிதொன்றில்லை.

இல்வாழ்க்கையானது மக்களினுலேயே மிகுந்த சிறப்பை யடைகின்றது. ஆயினும் அம்மக்கள் கல்விகேள்விகளின் மிகுந்து உயரிய அறிவையடையும் உரிமை மைந்தரைப் பெற்றாலன்றி அவ்வில்வாழ்க்கையானது பெரிதுஞ் சிறப்படையாது. ஆதலினுல் ஒருவன் பெறும் பேருக எண்ணுதற்குரியது நல்லறிவுடைய மக்களைப்பெறும் பேறேயாகும். நுண்மாண் நுழைபுலமிலாத மக்கள் விலங்கோடு சமமாக எண்ணப்படுவர்.

“விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்”

என்று திருவள்ளுவ நாயனுர் கல்லாதவர்களை விலங்குகளோடு ஒப்பவைத்துள்ளார். விலங்கினும் மக்கட்கேற்றமாய உணர்வுமிகுதி காணப்படுவது கற்றார்கண்ணேயாகலின் கல்லாதவரும் கற்றவரும் ஒத்தவர்களல்லர் என்பதாம். கல்வியறிவில்லாதார் மாக்கள் என்று கூறப்படுவார். மாக்களுக்கும் மக்களுக்கும் உள்ள வேறுபாடு

“மாவும் மாக்களும் ஐயறிவினவே”
“மக்கள் தாமே ஆறறி வுயிரே”

எனவரும் தொல்காப்பியச் சூத்திரங்களால் இனிது விளங்கும். மா—நாற்கால் விலங்கு; மாக்களெனப்படுவார் மனவுணர்ச்சியில்லாத மனிதர்; மக்களென்னுஞ் சிறப்புப் பெயர்க்குரியார் ஐம்பொறி யுணர்வேயன்றி மனமென்பதோர் உயரியஅறிவினையுடையார். இவ்வறிவினை யிலாதார் பிறப்பான் மனிதராயினும் அறிவினுல் மாக்களாகவே கருதப்படுவார். ஆதலின் இவர்களுக்கும் விலங்குகளுக்கும் அறிவில் வேற்றுமையில்லையேயாம்.

“நன்று தீதென் றியலெரி நல்லறி
வின்றி வாழ்வ தன்றோ விலங்கின்னிடை”

என்றும்,

“தக்கவின்ன தகாதன வின்ன வென்
றொக்க வுன்னல ராயி னுயர்ந்துள
மக்களும் விலங்கே மனுவின் னெறி
புக்க வேலவ் விலங்கும் புத்தேளிரே”

என்று கம்பர் பெருமான், விலங்குகளுக்கும் மக்களுக்கும் ஊண் உறக்கம் முதலாய தொழில்களும் ஐம்பொறியுணர்வும் சமமாயினும் விலங்குகளினும் பார்க்க மனிதர் சிறப்புடையராய் எண்ணப்படுதற்குக் காரணம் நல்லவை தீயவை இவ்விவையெனப் பகுத்து அவ்வவற்றின் நன்மையையுந் தீமையை

யும் அறியும் அறிவு விலங்குகளுக்கு இல்லையாக, மக்களுக்கு அவ்வறிவு முக்கியமாக இருத்தலேயாகும் என்று மக்களுக்கும் விலங்குகளுக்குமுள்ள வேறுபாட்டை நயம்பெற விளக்கினர். இவ்வேறுபாடு,

"நல்லதன் நலனும் தீயதன் தீமையும்
இல்லென் போர்"

எனவரும் புறநானூற்றடிகளாலும்

"அறிவாவது: நல்லதனலனுந் தீயதன் தீமையும்
உள்ளவா றறிதல்" (தோல்-போருளி. 53,

எனவரும் தொல்காப்பியச் சூத்திர நச்சினார்க்கியர் ' உரையானும் இனிது பெறப்படும்.

ஆகவே உயரிய மனனுணர்வின்றி ஐம்பொறியுணர்வையேயுடையார் மாக்கள் என்று கருதப்படுதலே,

"மொழிபல பெருகிய பழிதேர் தேஅத்தும்
புலம்பெயர் மாக்கள்" (பட்டினப்.216-17)

என்பதன் விசேடவுரையில் 'மாக்களென்றார் ஐயறிவுடையராதலின்' என்றும்,

"மடக்குறு மாக்களோடு" (கலி. 82)

என்பதில் மாக்களென்பதற்கு அறிவில்லாத மகளிர் என்றும்,

"மையலங் கோயின்மாக்கள் மடைதிறந் திட்ட
தொத்தார்" (சீவ. 1278)

என்பதன் விசேடவுடையில் மாக்கள் என்பதற்கு.

"மக்கட்குரிய மனனின்றி அறிவு கெட்டமையின் ஐயறிவுடையயார் என்று மாக்கள் என்றார்."

என்றும் வருகின்ற மூலப்பகுதிகளானும் அவற்றிற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரைப்பகுதிகளானும் அறியலாகும்.

ஆதலினால் மாக்கள் எனப்படுவார் ஐயறிவுடையார் என்பது அவர்களுக்குப் பகுத்தறியும் அறிவு இன்று என்பதும் அவர்களை மைந்தராகப்பெறுதலின் உறுதுயர் நீங்கி யிருமையின்பமும் பயவாதென்பதும் பெறப்படுதலின் 'உரிமை மைந்தரை' எனக் கம்பர்பெருமான் கூறியது அறியவேண்டியன அறிதற்கு உரிமையான மைந்தரையே யாமென்க. இவ்வாறே வள்ளுவரும்,

"பெறுமவற்றுள் யாமறிவதில்லை அறிவறிந்த
மக்கட் பேறல்ல பிற"

என்னும் குறளிலே அறிவறிந்த மக்கள் எனச் சிறப்பித்துக் கூறினர் என்க.

உரிமை மைந்தர் என்பதற்கு, அறியற்பாலன அறியும் உரிமையுடைய மைந்தர் எனப் பொருள்கொள்ளுதலேயன்றி, மனிதர்களாற் பெறுதற்கேற்ற பொருள்களுள் இன்றியமையாது பெறுதற்கு உரிமையாய மைந்தர் எனவும் பொருள் கொள்ளலாம். ஏனெனில்,

> "பெறுமவற்றுள் யாமறிவதில்லை யறிவறிந்த
> மக்கட்பேறல்ல பிற"

எனவும்.

> "தம்பொரு ளென்ப தம் மக்கள்"

எனவும்,

> "மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்
> நன்கலன் நன்மக்கட் பேறு"

எனவும் மக்கட்பேற்றையே பெறும் பேறுகளெல்லாவற்றுள்ளும் உயரிய பேருகத் திருவள்ளுவர் கூறுதலானும்,

> "பொன்னுடையரேனும் புகழுடைய ரேனுமற்
> றென்னுடைய ரேனு முடையரோ—இன்னடிசில்
> புக்களையுந் தாமரைக்கைப் பூநாறுஞ் செய்யவாய்
> மக்களையிங் கில்லா தவர்"

எனப் பொன் புகழ் முதலாய பொருள்களெல்லாவற்றினும் முதன்மையான உடைமையாகக் கருதப்படுதற்குரியார் மக்களேயாவர் எனப் புகழேந்திப்புலவர் கூறுதலானும்,

> "படைப்புப் பல படைத்துப் பலரோ டுண்ணு
> முடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்
> குறுநடை நடந்து சிறுகை நீட்டி
> யிட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்து
> நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்து
> மயக்குறு மக்களையில் லோர்க்குப்
> பயக்குறை யில்லை தாம்வாழு நாளே"

எனச் செல்வராயினும் மக்களையில்லோர்க்கு வாழுநாள் பயனில்லை என மக்களையே பெறுதற்கு உரிய முதன்மையான பொருள் என்று புறநானூற்றுள் வருதலானும் என்க.

மைந்தர் கல்வி கேள்விகளான் நிறைந்தும் நற்குண நற்செயல்களுக் கிடனாகியும், சான்றோரால் புகழப்பெற்றும் சிறு

மையில் 'முறியிளமுல்லை மெல்லரும் பன்ன மூரல் வெண்டயிரளை பொதிந்து குறுகுறு நடந்தும்' அமிழ்தினுமினிய மழலை மொழிந்தும் அகங்களிக்கச் செய்தலின் இம்மையின்பத்தை யடைகிறார்கள்.

"மழலை மென்மொழி இனிதாதலை நயம்பெறப் பாராட்டி,
குழலும் யாழு மினியவெனக் கூறுவண்ணமென் கனிவாய்
மழலை மொழிந்து." (பிரபுலிங்க)

எனவும்,

"யாழொடுங் கொள்ளா பொழுதொடும் புணரா
பொருளறி வாரா வாயினுந் தந்தையர்க்
கருள்வந் தனவாற் புதல்வர்தம் மழலை' (புறம்.92)

எனவும்,

"ஐய! காமரு நோக்கினை யத்தத்தா வென்னுநின்
றேமொழி கேட்ட லினிது" (கலி-80)

எனவும்

'அவர்மழலை கேட்டல் அமிழ்தி னினிதே' (இனியது. 15)

எனவும் ஆன்றோர்கள் கூறிய பகுதிகள் அறிந்து மகிழ்தற்குரியன.

எழுபிறப்பினுஞ் சென்று தீவினைவயத்தால் அனுபவித்தற்குரிய துன்பங்களானவை பெற்றோரின் நன்மையைக் குறித்து மைந்தர்செய்யுந் தான தருமம் முதலாய கருமங்களால் நீங்கி நற்கதியடையச் செய்தலின் மக்களால் மறுமையின்பத்தையும் பெற்றோர் அடைகிறார்கள். இதனையே "மைந்தரைப் பெறுகின்றது உறுதுயர் நீங்கி இருமையும் பெறற்கு" என்று கம்பர் கூறினார். இவ்வாறே, மக்கட் பேற்றினால் இருமையின்பமும் பெறுதலை வள்ளுவரும்,

"அமிழ்தினு மாற்ற வினிதேதம் மக்கள்
சிறுகை யளாவிய கூழ்"

"மக்கண்மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு"

"குழலினி தியாழினி தென்பதம் மக்கண்
மழலைச் சொற்கேளா தவர்"

என்னுங் குறள்களினால் இம்மைப்பயன் பெறுதலையும்

"எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்"

"தம்பொரு ளென்பதம் மக்க ளவர்பொரு
ளந்தம் வினையான் வரும்"

என்னுங் குறள்களினால் மறுமைப்பயன் பெறுதலையும் கூறினார்.

மக்கட் பேற்றினால் துன்பம் நீங்கப் பெறுதலை,

இறந்த மேலோர்
துன்பமு நிரயஞ் சேர்வுந் துடைத்திடுந் தொன்மை நோக்கி
யன்புறு புதல்வர்க்காக அரிவையைக் கோடியையா (கந்த)

எனவும்,

பாராவரும் புதல்வரைப் பயக்க யாவரு
முராவருந் துயரைவிட் டுறுதி காண்பரால் (கம்ப)

எனவும் வருதலால் அறியலாகும்.

(தொடரும்)

---

# விடுகதைகள்

1. ஆற்றிலே பிறந்து ஆற்றிலே வளர்ந்து
ஆற்றிலே வாழும் ஆற்று மீனே! எல்லா
ஆறிலும் பொல்லா ஆறு எது?

—(அழுக்காறு)

2. பூவிலே பிறந்து பூவிலே வளர்ந்து
பூவிலே வசிக்கும் பூநாகமே! எல்லாப்
பூவிலும் பொல்லாப் பூ எது?

—(எரிப் பூ—எரிப்பு)

(கா. சிவ. சு.)

# அறிவியற் பகுதி - Science

## தமிழ் எழுத்துக்களின் நுண்மை விளக்கம்

[பா. வே. மாணிக்க நாயக்கர்—க. ப. சந்தோஷம் B. A., L. T.,]

புரைபடா முறையொன்றைத் தழுவித் தமிழ்மொழி யமைக்கப்பெற்றிருக்க வேண்டுமென்பதை விளக்க விழைகின்றேன். இம்முறையுண்மைகொண்டு, இம்மொழி தனிப் புலமை வாய்ந்த ஒரு பெரியோரால், அல்லது ஒரு குழுவினரால் இயற்றப்பட்டதென்பது பெறப்படும் ஒருமொழி ஒருவரால் அல்லது ஒரு குழுவினரால் ஒரு முறைப்படி வகுக்கப்பட்டதென்பது பொதுவாக மொழிகளின் வளர்ச்சியொழுங்கிற்கும் வரலாற்றொழுங்கிற்கும் முரண்படுவதென்று தோன்றும். தமிழ்மொழியின் அடிப்படையாய் இலங்கும் முறை, மறைத்தன்மையும் உண்மையியலும் விரவியதொன்று என்பதைக் கருதின் அம்முரண்பாடு வலியுறுமாயினும், ஆழ்ந்து நோக்குவார்க்கிங்கு இடரொன்றும் எழக் காரணமில்லை. தமிழ்மொழியை ஆக்கப்பெற்ற ஒன்முகக்கொண்டு, அதை ஆக்கினேன், அல்லது, ஆக்கினேரில் வளர்ச்சியொழுங்கு விளங்குகின்றதாவென் ருராய்தல் வேண்டும்.

தமிழ்மொழி ஒருமுறையைத் தழுவி இயற்றப்பெற்றிருத்தலை விளக்க இரண்டொரு சிறிய எடுத்துக்காட்டுகளைப் பார்க்கலாம். தமிழ்மொழியிலுள்ள எண்ணுப்பெயர்களைத் தமிழொடு தொடர்பிலா வேறு மொழிகளின் எண்ணுப் பெயர்களுடன் ஒப்பிடுவோம். தமிழில் ஒன்று, இரண்டு, ஒன்பது, பத்து, பதினொன்று, தொண்ணூறு, நூறு, தொள்ளாயிரம், தொள்ளாயிரத்துத்தொண்ணூற்றொன்பது, ஆயிரம், ஆயிரத்தொன்று, ஆயிரத்துத் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்பது, இரண்டாயிரம் முதலிய எண்ணுப் பெயர்களுள. ஆங்கிலத்தில், ஒன், டூ, த்ரீ, ஃபோர், ஃபைவ், ஃசிக்ஃச், எய்ட், ட்வென்டி, தௌஃசன்ட்ஃ, முதலியவற்றைப் பார்க்கின்ருேம். ஹிந்துஸ்தானியில் ஏக், தோ, தீன், சார், பாஞ்ச், செ, சாத், ஆட், நௌ, தஃச், முதலிய எண்ணுப் பெயர்களுண்டு.

ஆங்கிலத்தில், ஒன் என்பது தவிர மற்றைய எண்ணுப் பெயர்கள் சமஸ்கிருதத்தோடு தொடர்புடையவை.

டூ = two — twice, twain, த்வே ;
த்ரீ = three — த்ரீணி
∴ போர் = Four — சத்வாரி (லத்தீன் மொழியிலுள்ள quater என்பதோடு ஒப்பிட இது விளங்கும்.)
∴ பைவ் = Five — பஞ்ச
∴ சிக் ∴ ச் = Six — ஷட்
∴ செவன் = Seven — சப்த (லத்தீனில் ஏழு பக்கங்களுடைய ஒருருவத்திற்கு செப்டகன் என்று பெயர் வருதல் காண்க.)
எய்ட் = Eight — அஷ்ட
நைன் = Nine — நவ
டென் = Ten — தச

ஹிந்துஸ்தானியிலுள்ள எண்ணுப் பெயர்கள் சிறிது மாறிய சமஸ்கிருதப் பெயர்களே என்பது விளங்கும்.

தோ = த்வே
தீன் = த்ரீணி
சார் = சத்வாரி
பாஞ்ச் = பஞ்ச
செ = ஷட்
சாத் = சப்த
ஆட் = அஷ்ட
நௌ = நவ
தஸ் = தஸ

ஆங்கிலத்திலும் ஹிந்துஸ்தானியிலும் எண்ணுப்பெயர்கள் முறையின்றி உயிரீறும் மெய்யீறும் பெறுகின்றன; தமிழிலோ எண்ணுப்பெயர்கள் உகரவிறுதி பெறுகின்றன. ஆயிரம் என்பதில் மாத்திரம் மகரவீற்றைப் பார்க்கின்றோம். உகரமும் மகரவொற்றும் நாம் நன்கறிந்த வெழுத்துக்கள். பிரணவத்தின் முப்பகுதிகளாய அ, உ, ம் என்பவற்றில் இடையுங்கடையும் முறையே உகரமும் மகரவொற்றுமாம். இவற்றுள், அகரம் எங்கும் நிறைகின்ற உயிராகிய இறைவனையும், உகரம் தனித்தனி உயிர்களேயும், மகரம் உயிரைப்பற்றி நிற்கும் மலத்தையுங் குறிக்குமென்று முன்னே கண்டோம். அகரத்தாற் குறிக்கப்படுகின்ற பதி அல்லது இறைவன், எண்ணிற் கடங்கானென்பது கூறவேண்டுவதில்லை உகரத்தாற் குறிக்கப்படுகின்ற ஆன்மா அல்லது உயிர் மல நீங்கிய நிலையில்

உருவுடையதன்றாதலின் அதுவும் எண்ணலளவைக்குட் படாது. மகரவொற்றால் விளக்கப்படும் மலங்களும் நுண்ணிய நிலையில் புலனுணர்வுகடந்தவையாதலின், எண்ணப் பெறா. பசு அல்லது ஜீவாத்மாவாகிய உகரம் பாசத்தாற் கட்டுண்டபொழுது உற்றுணரக்கூடிய வடிவமதற்குண்டு. ஆதலின், அது எண்ணற்கடங்கும். உகரமாகிய உயிர் திரிமலகோசமாகிய மெய்யெழுத்தில் புகும்பொழுது அது எண்ணலளவைக்குட்படும். இங்ஙனமாயின், ஒன்று என்பதற்கு ஒரு உகரமென்றும், பத்து என்பதற்கு எட்டிரண்டு உகரங்களென்றும் பொருள் செய்யலாங்கொல்? இஃதுண்மையாயின், ஆயிரம் எனுஞ்சொல்லின் ஈற்றிலுள்ள மகரவொற்றின் பொருளைப் பின்வருந் திருமந்திரச் செய்யுள்களுட் காணலாம்,

"அணுவு ளவனு மவனு ளணுவும்
கணுவற நிறை கலப்ப துணரார்
இணையி லீசனவ னெங்கு மாகி (த்)
தணிவர நின்ற சராசரந் தானே"

"அணுவி லணுவினை யாதிப் பிரானை
அணுவி லணுவினை யாயிரங் கூறிட்
டணுவி லணுவை யணுகவல் லார்கட்
கணுவி லணுவை யணுகலு மாமே"

இவ்வாறாயின், தமிழ் எண்ணுப் பெயர்களில் அமைந்து கிடக்குமுண்மையைக் கீழ்க் கண்டவாறு நவிலலாங்கொல்?

"பதிபசு பாச மெனுமுப்பொருள்களுள்
முதல திலக்கில விடையுங் கடையும்
புணர்வுழி யெண்ண லளவைக் கிணங்கலின்
எண்ணுப் பெயர்கள் எண்ணு முகரத்தையே"

பெரியீர், யான் புனையுமாற்றல் கொண்டு (கற்பனா சக்தி) இவ்வாறு பேசுகின்றேனென நினைப்பீர்களாயின், பொறுத்திடுமாறு உங்களை வேண்டுகின்றேன். எடுத்துக் கொண்ட பொருளை நன்கறிவதற்கு இத்திறமை பெரிதும் வேண்டப் படுவதொன்றே. விந்தை மிக்க இம்மொழியைக் கற்பதற்கு வழங்கப்படும் இத்திறம் வீண்போகாது.

தமிழ்மொழியி னமைப்பிற் கடிப்படையாய் நிற்கும் செவ்விய முறையை அதன் மெய்யெழுத்துக்களில் எளிதாய்க் காணலாம். இம்மொழியின் மெய்யெழுத்துக்கள் இம்மொழியின் சிறப்புக்களி லொன்றாம். இவை பகுக்க வொண்ணா எளிய ஒலிகள். ஆறெழுத்துக்கள் சேர்ந்த மூன்று பகுப்பினை யுடையனவாய் இவை விளங்குகின்றன. இவைகட்கு உடம்பு,

மெய், உடல் (திரிமலகோசம்) என்று பெயர். மேற்கூறிய மூன்று பகுப்புகளும் முறையே வல்லினமெய், இடையின மெய், மெல்லினமெய் எனப் பெயர்பெறும். இப்பெயர்களே மொழியின் உண்மை இயலைத் தழுவிய அடிப்படையை விளக்குந்தகையவா யிருக்கின்றன. நமசிவய என்ற பஞ்சாட்சரத்தில் ந, ம, என்ற இரண்டு மெல்லின வெழுத்துக்கள் உள. இவ்விரண்டெழுத்துக்களால் குறிக்கப்படுவன த்ரோதமும் (மறைப்பு) மலமுமாம். எஞ்சி நிற்கும் சி, வ, ய என்ற மூன்றெழுத்துக்களில் வகரயகரங்கள் இடையினமெய்கள் இவையிரண்டும் வீடளிக்கும் எழுத்துக்கள் என்று மதிக்கப் படுகின்றன. சிகரவெழுத்து மொழிவகையில் வல்லினமெய் யாயினும், மந்திரங்களில் இதை முக்கூறுடைய ஓரெழுத்தாகக் கூறவேண்டும். இதில், ஆய்தவெழுத்தென்றும், திரிநேத்ரவெழுத்தென்றும், சிவவெழுத்தென்றும் சொல்லப்படுவதாகிய ∴ முதலில் வரவேண்டும். எங்ஙனமெனின், ∴ — ச் — இ = சி. இங்ஙனம் கூறப்படுங்கால் இது வல்லினமாகாமை காண்க. ஆதலின், பஞ்சாட்சரத்தில் சிகரமும் ஒரு இடையின வெழுத்தாகின்றது. ஐந்தெழுத்துக்களில் மூன்றெழுத்துக்கள் இடையினத்தையும், இரண்டெழுத்துக்கள் மெல்லினத்தையுஞ் சேர்ந்தவை. அகராதியிலுள்ள சொற்களை நோக்குங்கால் இடையினத்தில் தொடங்குகின்ற ஒரு சொல்லுக்கு, மெல்லினத்தில் தொடங்குகின்ற சொல் இரண்டும், வல்லினத்தில் தொடங்குகின்ற சொல் எட்டும் உளவென்பது வெளியாகின்றது. பொதுவானவற்றைப் பேசும் ஒரு தமிழ்நூலை எடுத்துக் கொண்டு அதிலுள்ள இடையின மெல்லின வல்லின வெழுத்துக்களை எண்ணுவோமாயின், இடையின வெழுத்துக்கள் தொகையில் மிகச் சுருங்கியும், வல்லின வெழுத்துக்கள் நனி பெருகியுமிருக்கக் காணலாம். இது கொண்டு நாமறிவதென்னையெனின், மகாமந்திரங்களில் எவ்வெழுத்துக்கள் பெருகித் தோன்றுகின்றனவோ, அவை பொது மொழியில் அருகித் தோன்றுகின்றன; மந்திரங்களில் அருகியுள்ளவை பொதுமொழியில் பெருகிக்கிடக்கின்றன. பொதுமொழியிலுங்கூடச் சிறப்பாக ஒரு பொருள் எடுத்து நுவலப்படுங்கால் அப்பொருளின் தன்மைக்கேற்ப மெல்லினம், இடையினம், வல்லினம் என்ற மாயா, காமிய, ஆணவ எழுத்துக்களின் தொகை முற்கூறிய முறைபிறழ வருகின்றன. ஒரு நூலின் ஒரு பகுதியில் வெளிப்படும் ஆணவ மலத்தினளவை அப்பகுதியிலுள்ள வல்லின மெய்களின் தொகையைக்கொண்டு கணக்கியல் வகையில் திருத்தமாகச் சொல்லி விடலாம்.

கம்பராமாயணத்தில் சடாயு உயிர்நீத்த படலத்தில் இராவணன் சடாயுவைப் பெருமிதத்துடன் நோக்கிக் கூறுஞ் செய்யுளை உதாரணமாக எடுத்துக் கொள்வோம்.

"கேட்டானிருதர்க் கிறை கேழ்கிளர்தன்
வாட்டாரை நெருப்புக வாய்மடியா
ஓட்டாயினி நீயுரை செய்குநரைக்
காட்டாய் கடிதென்று கனன்றுரையா"

இதில் வல்லினமெய் நூற்றிற் கைம்பத்து மூன்றும்; மெல்லின இடையின மெய்யிரண்டும் சேர்ந்து நூற்றுக்கு நாற்பத்தேழும் வந்தன.

கம்பராமாயணத்தில் வாலி வதைப்படலத்தில் சுக்கிரீவன் வாலியைப் போர்க்கழைக்குமிடத்தில் ஆணவம் முன்னினும் மிகுந்து வெளிப்படுவதால் வல்லின மெய்களின் தொகை மேலுமுயர்கின்றது.

"இடித்துரப் பிவந்துபோ ரெதிர்த்தியே லடர்ப்பனென்
றடித்தலங்கள் கொட்டிவாய் மடித்தடுத் தலங்கு தோள்
புடைத்து நின்றுளைத்த பூசல் புக்கதென் பமிக்கிடம்
துடிப்பவங் குறங்கு வாலிதிண் செவித்தொளைக்கணே"

ஈண்டு ஆணவ எழுத்துக்களாகிய வல்லினங்களின் தொகை நூற்றுக் கறுபத்துநாலு வரையிலேறி நிற்க, மற்றைய விரண்டினங்களின் தொகை நூற்றுக்கு முப்பத்தாறுகக் குறைந்து நிற்கின்றது.

கம்பராமாயணம், மாயா ஜனகப்படலத்தில் சீதையை இராவணன் தன் காமத்திற்கிணங்க வேண்டுகின்ற செய்யுளில் காமிய எழுத்துக்களாகிய மெல்லின மெய்களின் எண்ணிக்கை பெருக, ஆணவ, வல்லின மெய்யெழுத்துக்களின் எண்ணிக்கை குறைவதைப் பார்க்கலாம்.

"வஞ்சனே னெனக்கு நானே மாதரார் வடிவுகொண்ட
நஞ்சுதோ யமுத முண்பா னச்சினே நாளுந் தேய்ந்து
நெஞ்சு நேரான நும்மை நினைப்புவிட் டாவிநீக்க
அஞ்சினே னடியனேனும் மடைக்கல மமுதின் வந்தீர்"

இதில் காமிய மெல்லெழுத்துக்கள் நூற்றுக்கு நாற்பத்தேழு வீதமும், ஆணவ வல்லெழுத்துக்கள் முப்பத்தாறு வீதமும், இடையினம் பதினேழு வீதமும் வந்தமை காண்க.

இஃதிங்ஙனமாக, நுவலப்படும் பொருள் நுண்ணிய தாய்த் தூயதாயிருக்குமாயின், வேண்டப்படுவது வீடாயின், யாதாயினுமொன்று கருதி அகங்குழைந் திறைஞ்சுவதாயின்,

வீடுபே றளிக்கும் எழுத்துக்களைத் தம்மகத்திற்கொண்ட இடையின வெழுத்துக்கள் தொகையிற் பெருகுவதற்கு ஒரு தாரணமாயினுங் காட்டக் கடமைப்பட்டிருக்கின்றேன்.

"எழுவாயெவர்க்கு முதலாகி யீறொடிடையாகி
யெங்கு முளையாய்
வழுவாதவர்க்கும் வரமீய வல்லை யவரால்
வரங்கள் பெறுவாய்
தொழுவாயுணர்ச்சி தொடராத தன்மையுருவாய்
மறைந்து துயரால்
அழுவா யொருத்தனுளை போலுமாரிவ் வதிரேக
மாயை யறிவார்."

இராமன் மூர்ச்சையடைந்தபொழுது கருடன் இராமனை மன முருகிப்போற்றிய இச்செய்யுள் கம்பராமாயணம் நாகபாசப் படலத்தில் வருகின்றது. ஈண்டு, ஆணவவெழுத்துக்கள் தமது இயற்கைவீதங் குன்றி, நூற்றுக்கு இருபத்தொன்பதாகவும், காமிய வெழுத்துக்கள் அதனினுங் குறுகிப் பதின்மூன்றாகவும், இடையினவெழுத்துக்கள் வியத்தகுவண்ணம் நூற்றுக்கு ஐம்பத்தொன்பதாகவுந் தோன்றுகின்றன.

மந்திர விதியின்படி இடையின வெழுத்துக்கள் ஆறில் ய, ர, வ என்ற மூன்றுமே வீடுதரும் திறமைவாய்ந்தன. மேலெடுத்துக்காட்டிய செய்யுள் சிதம்பரத்திலொரு குழந்தை யிறந்த காலை, மீண்டுமஃதுயிர் பெற்றெழும் பொருட்டுக் கம்பன் பகர்ந்த இருபத்துநான்கு விருத்தங்களில் ஒன் றென்பர். இச்செய்யுளை மேலுங்கூர்ந்து நோக்கி, ஈண்டு நாம் காணும் இடையின வெழுத்துக்களுக்கும், யகர, ரகர, வகரங் களுக்குமுள்ள வீதப் பொருத்தமென்னவென் றாராய்வோ மாயின், அது நூற்றுக்கு எழுபத்தொன்றாகின்றது. இவ் வெழுத்துக்களின் எண்ணிக்கையை விடுத்து, மாத்திரை வகையில் இவை என்ன வீதம் பெறுகின்றனவென்று பார்த் தால் நூற்றுக்கு எண்பதாகின்றது. பொதுவாக வழங்கப்படும் மொழியில் இடையின வெழுத்துக்கள் தோன்றும் வீதத்தை மாற்றி, வேண்டுமென்றே கம்பர் இத்தகைய செய்யுட்களில் அவற்றின் தொகையைப் பெருக்கினாரென்று சொல்லலியலா தாயினும், இச்செய்யுட்களில் நவிலப்பெறும் சுவைக்கும், பாம்பு கடித்து மாண்ட பிள்ளை மீண்டதென்னுங் கதைக்கும், இடையின வெழுத்துக்களுக்கும் உண்டாகுந் தொடர்பு பெரி தும் வியத்தற்குரியதே. பெரியீர், பொதுவறிவின் வரம்பைக் கடந்து நிற்குமொரு கருத்தை யுங்களிற் புகுத்த யான் முயல் கின்றேனென்று நீங்கள் தவறாக நினைத்தல்கூடும். அஃதென்

நோக்கமன்றென்று திண்ணமாய்க் கூறுகின்றேன். யான் விளக்கமுயல்வது, தமிழ்மொழியினமைப்பில் மறைந்து கிடக்கும் ஒரு முறைமையால் தூண்டப்பெற்று, அம்மொழியை வழங்குகின்றவர்கள், மலக்கட்டினின்றும் உயிர் நீங்கவேண்டுமென்ற விருப்பத்தோடு தொடர்புடைய உணர்ச்சிகளை வெளியிடுங்கால் இடையின வெழுத்துக்களைப் பெரிதும் பயன்படுத்துகின்றார்கள் என்பதாம். இங்ஙனம், மெய்யெழுத்துக்களின் ஒலியோடு ஒன்றி நிற்கும் உணர்ச்சி யொழுங்கு கொண்டு செய்யுட்களில் வெளிப்படும் சுவைகளை அளக்கப் புகுங்கால் ஒருவகை யுணர்ச்சி மற்றோருணர்ச்சியின் வடிவந் தாங்கி வருகின்றதோவென்று ஆராய்தல்வேண்டும். எங்ஙனமெனின், ஓரடியவன் வீடுபேறு வேண்டித் தான் வழிபடுந் தெய்வத்தை இறைஞ்சுகின்றான்; இது செய்யுங்கால் வீடுபேறடைவதற்குத் தனக்குரிமையுண்டென்றவன் உளத்தடிப் புடையவனாகின்றான். ஈண்டு, உரிமையென்ற திட்பம் வருதலின், ஆணவமென்ற மலமுந் தோன்றுகின்றது ஆதலின், இத்தகைய உணர்ச்சி வெளிப்படுதற்கேற்ப வல்லெழுத்துக்களே யாண்டு பெரிதும் வந்தேறும் என்பதறிக. மற்றோரடியவன் தன்னையொரு மங்கையாக நினைத்துத் தான் வழிபடு கடவுளைக் காதலனாய்க்கருதி வேண்டுகின்றான். ஈண்டும் விடுதலையே பொருளெனினும், காதலென்னும் சுவை வெளிப்படுதலால் அவன் வழங்கும் மொழியில் மெல்லெழுத்துக்கள் மிகும். இவ்வாறு பல்வேறு வகையில் சுவைகள் மொழியில் வெளிப்படுமாயினும் முன்கூறிய எழுத்துமுறை பிழைபடாதென்க.

---

# செய்திகளும் குறிப்புகளும்:
# News and Notes

[புதுக் கவி]

## ஆலயத்திறப்பு

அல்லது

## க்ஷேத்திரப் பிரவேசனச் சதகம்

நொண்டிச் சிந்து

'இசைத்தமிழ்ச் செல்வர்'

[உயர் திரு. T. லக்ஷ்மண பிள்ளை பி. ஏ. அவர்கள் பாடியது.]

கேளுமின், உலகோரே,—முன்னே
கேட்டறியா இந்த நாட்டகத்தில்
மூள்கின்ற முன்னேற்றம்,—செய்திகள்
முழுவதுங் கேட்டுக்கை தொழுமின்களே! 1
ஸ்ரீஜனகத்திருவும்—வாணியும்
சேரவிளங்கும் இந்தச் சேரநாட்டில்
ராஜாரவிவர்மன்—என்னும்
ராஜ, கலைஞன் உலகம் புகழ்வோன் 2
சித்திரக் கலைதனிலே—உலகிற்
சிறந்த*றபேலுக்கும் அஞ்சிலோவுக்கும்
ஒத்த சமத்துவனாய்—மண்டலம்
உள்ளளவும் திகழ்கலை வள்ளலவனே 3
தோன்றிய திருக்குலத்தில்—அன்னவன்
தூயதிரு மகளுக்குத் திருமகளாய்
ஆன்ற கல்வியும் அறிவும்—ஆழ
அகன்ற நோக்கமும் மனமுகந்த சொல்லும் 4
ஆய்ந்தறியுந் திறமும்—பெண்களின்
அவைகளிற் சொல்லெழுந்த சுவைத்திறமும்
வாய்ந்த செயலறிவும்—செய்வதில்
வருந்தடைகளை வெல்ல அருந்துணிவும், 5

* Raphael and Michael Anjelo, the famous painters.

*மகிமையுந் தங்கியிடும்—செல்வி
மகாராணி ஸேது பார்வதி பாய்
வெகுநாள் தவமிருந்து—கடவுளை
வேண்டிக்கொண்டாளுக்கோர் ஆண்டகைச்சேய* 6
*சித்திரைத் திருநாளில்—உதித்த
சேரலர் மன்னன்செங் கோலரசன்
சத்தியந் தவறாத—வேந்தன்
சகல மனிதருக்கும் நிகரில் நண்பன்* 7
*ராஜ கலைகள் விளங்கும்—பால
ராமவர்ம னென்னும் நாமமுள்ளான்
தேசும் திருவுமுள்ளான்—சகல
தேசமும் தன்பெயர் வீச நிற்பான்;* 8
*பக்தியிற் சிறந்தோனே—நமது
பாரதமாண்ட ஸ்ரீராமன் நற்பேர்
சித்திக்க வல்லவனே—மேற்குச்
சீமையெல்லாங்கண்ட மேன்மையனே;* 9
*பேதிப் பொன்று மின்றி—மனிதர்
பிரிவினை வேற்றுமை தெரிகிலனாய்
ஜாதிப் பிளவுகளை—சற்றும்
சற்றும்சட்டை பண்ணேன் என்ற நிஷ்டையனாய்த்;* 10
*தோன்றியோன் இளமையிலே, ஸமஸ்க்ருதம்
தொல் தமிழ், ஆங்கிலம், மலையாளம்
ஆன்றனன் கல்வியிலே, விளங்க
அடுத்தது காட்டிய பளிங்கினைப்போல்* 11
*முகமலர்ந்தினிய சொல்வான்—தாயின்
முகதரிசனம் தெய்வ தரிசனமாய்
அகமலர்ந் தமைவுறுவான்—யார்க்கும்
அன்புநிறை செயல்புரிந்தின்புறுவோனே;* 12
*நீதிக் களஞ்சியமே—கருணை
நிருத்தம் செய்கின்ற பெருங்கருத்துடையான்
ஜாதிக் கடுமுறையில்—எண்ணில்
தலைமுறை தலைமுறை யாகக்கொண்டே,* 13
*கோவில் நடையதற்குள்—புகுந்து
கும்பிடுவ தென்பது விலக்கப்பட்டு*

நாவில் கால் நடைக்கும்—கீழாய்
நடத்தப்பட் டவர்னர் என்றுடற்றப்பட்டு, 14
தொடுவதும் பாபமென்று—தூரத்தில்
துரத்தப்பட் டளவின்றி வருத்தப்பட்டு
கொடுவறுமைக் கிரையாய்—தாங்கள்
கொள்ளும் வருத்தங்களை விள்ளுதற்காய், 15
ஆண்டவன் முன்செல்லின்—அசுத்தம்
அவனுக்கும் உற்று மகத்துவங் குறையும்
தீண்டலும் பாவ மென்று—ராஜ
தெருவிலே நடப்பதும் ஒருவப்பட்டு, 16
நம்பனின் கோவிலுக்குள்—கடக்கும்
நாயும், வௌவாலும், பொன்வாயும், நத்தும்,
தும்பியும், காகமுமே—சென்று
தொடலாம் கழித்திடலாம் அசுத்தம், 17
ஆனால், அவர்னர் என்னும்—மனிதர்
அடித்தடம் படில் பாபம் பிடித்திடுமாம்
வாளுள் பகலனுக்கு—தாழ்ந்த
மனிதரைக் கண்டிடிற் புனிதம் போமென் 18
றூனாதி காலந்தொட்டு—மேலோர்
அடிபணிந் தவரிடும் பணிதொடர்ந்து
ஈன வினைகள் செய்து—வயிற்றுக்
கிரையிட்டு வெளிநிற்கும் ஹரிஜனங்கள், 19
செல்வமுங் கிடையாமல்—வேலை
செய்யினும், தகும்பலம் கைவராமல்
கல்வியும் அடையாமல்—கற்ற
கலைஞரைக் காணவுங் கிடையாமல், 20
பலகல்விச் சாலைகளும்—இருந்தும்
படிக்கப் பணங் கொடுக்க முடியாமல்,
கலையொன்றுந் தெரியாமல், முன்போல்
கடும்பணி தொடர்ந்திடும் ஹரிஜனங்கள், 21
கடவுளும் ஞானமுமே—அறியாக்
காட்டு மனிதரென ஒட்டப்பட்டு
அடைக்கலம் அதுவென்றே—மறுகி
அந்நிய மதம்புகும் ஹரிஜனங்கள்; 22

அலைக்கின்ற கொடும்பசிக்கும்—அடுக்கா
ஆணைக்கும் அஞ்சி வாளுளதனைத்
தொலைக்கின்ற மார்க்கமிதே—யென்று
தோன்றிப் பிறமதஞ்சேர் ஹரிஜனங்கள்; 23
இல்லாரை எவ்வெவரும்—எள்ளுவர்
என்ற வள்ளுவர்மொழி யொன்றின்படி
பொல்லாரென் றொறுக்கப்பட்டுப்—பிறமதம்
புகுந்து விடத்தகுந்த ஹரிஜனங்கள்; 24
சாகினுங் கேடில்லை—நெருப்பிலே
வேகினும் இதில் நலம், இதில் நலமென்
றேகிடப் பிறமதத்தில்—எண்ணி
யிருக்கின்ற நெருக்குற்ற ஹரிஜனங்கள், 25
படுகின்ற பாடுணர்ந்து—மன்னன்
பரதுன்பத்திற் கிரங்கும் பரிசுடையான்,
"சுடுகின்றதே யுள்ளம்"—ஓர்ந்திடில்
துக்க நிவர்த்திகள் செய்யத் தக்கதல்லவோ 26
"நம்மதம்? அதுவன்றேல்—அதனை
நயக்கு மனிதர்க்கென்ன பயக்கும்மது?
தம்மதம் துணைப்பதின்றேல்—அதனைத்
தழுவும் ஹரிஜனங்கள் நழுவுவரே; 27
"பொறுமை நிறைந்தமதம்—நமதே"
பொறுக்க முடியா திந்த ஒறுப்பறிவின்
வெறுமையைக் காட்டியதே!—இந்த
வெற்றறிவு நம்மதத்தில் உற்றதெங்ஙனம்? 28
"பரந்த உலகமெல்லாம்—நிறைந்த
பரம்பொருள் தனக்கொரு வரம்புளதோ?
நிரந்தர நேசம் சொன்ன—நல்லுப
நிஷத உண்மைக்கு வந்த விஷம மென்ன? 29
"அத்வைதம் சொன்னதென்ன?—உயிர்கள்
ஆதிப்பொருள் ஒன்றினதுபேதிப்பென்றல்லோ?
மித்தை யிவ் வித்தியாசம்—வீண், வீண்,
வெற்றுக் கற்பிதங்கள் அடியற்றுப் போகுமே, 30
"வேற்றுமைகள் பலவுமின்றி—மனிதர்
விரியுலகத்தில் வாழல் அரிதெனினும்

போற்றுந் தெய்வ சந்நிதிமுன்—நிற்கும்
போதுகுலம் வகுத்திடல் பேதைமை யன்றோ? 31
குடி ஜனங்களின் தாபம்—தீர்த்துக்
கொடுப்பவன் சிறந்த செங்கோலரசன்
முடியரசன் முறைக்கு—ஜனங்களில்
முன்பரிவர் பின்பரிவர் என்பதில்லையே, 32
"ஒரு நாடொரு குடும்பம்;—குடும்பத்தில்
உயர்ந்தவர், தாழ்ந்தவரெனப் பிரித்தல்
சரியோ? சிலர் தழைக்க—வேறுசிலர்
தாழ்வுற்றிடில் அக்குடும்பம் வாழ்வுற்றதுவோ? 33
"தந்தை குடிகட் கரசன்;—மக்களைத்
தரம் பிரித்தலும், அன்பில் வரம்பு வைத்துப்
பந்தனம் செய்திடலும்—உலகில்
பெருந்தன்மையாளர்க்குப் பொருந்துவதோ? 34
"யாவரும் ஈசன் மக்கள்;—ஈசன்முன்
எவர் பெரியவர், சிறியவர், எவரே?
தேவரென்றும் மனிதரென்றும்—ஈசனுக்குச்
சிறிதும் பேதமில்லை யென்றறிதல் நன்றே; 35
"மதிநலம் குல நலத்தால்;—ஆண்டவன்
மதிக்கிலன்; செயல்களை விதிக்கும் நெஞ்சின்
கதிநலம் ஒன்று கொண்டே—மனிதரைக்
கணக்கிடுவான் ஒரு சுணக்கின்றியே; 36
"மாமூல் என்பர் சிலர்;—பிசகுக்கும்
மாமூல் சொல்லலாமோ தோழுறவே?
ஆமெனில், அடிமைத்தனக்—கொடுமை
அகன்றிருக்கா தொன்றும் ஜகந்தனிலே; 37
"அரும்பெருந் தத்துவங்கள்—அடங்கிய
ஆதிஹிந்து மதத்திற்கோர் தீது வந்ததோ?
பெரும்பிணி யுறுத்தியதோ?—அது நின்று
பெருகிடில், அதன் உயிர் பருகிடுமே; 38
* "கோயிற் றிறப்பு யோகம்—என்றோர்
கூட்டு வயித்தியரைக் கேட்டு வைப்போம்!
நோயின் கூறறிந்து—மருந்து
நோய்க்குக் கொடுத்தல் நலமாக்குமன்றே!" 39
ஏழெட்டுக் கனவான்கள்—கூடியிருந்
தேக மனதாக அந்த ரோகிதனையே
சூழச் சூழ நோக்கினரே;—பலவகை
சூழ்ந்து சொல்லி ஆழ்ந்து சிந்தித்தோய்ந்தனரே; 40

* The Temple entry Committee.

*சாஸ்திரம் பார்வையிட்டார்—அவற்றில்*
*தகைவதும் ஒட்டுவதும் வகை தெரிந்து*
*வாஸ்தவங் கண்டு பிடித்தல்—மிகவும்*
*வருத்தமே; ஒன்றுக்கொன்று விருத்த மென்றார்.* 41
*மதவைராக்கியங்களும்—வகுப்பு*
*வழக்குகள் வளர்த்திடும் சழக்குக்களும்*
*சதவருஷம் தரினும்—மாற்றுதல்*
*சாதிப்பதில்லை மனங்கள் பேதிப்பதில்லை* 42
*என்ற முடிவுகண்டு—மனங்களும்*
*இளைத்தனர், பலபேசிக் களைத்தனரே;*
*மன்றதில் அறிஞர்களை—அழைத்து*
*வகையறிந்ததில் குணம் மிகவுமில்லை;* 43
*பொதுஜன அபிப்பிராயம்—கேட்டனர்*
*"போகும்பிணி ஒன்றலது சாகும் பிணியாள்*
*அது நிஜம்" என்றனரே; பற்பலர்*
*"அப்படிப்போம், இப்படிப்போம்" என்று குறித்தார்;*
*வருஷங்கள் இரண்டு சென்ற—பிணியும்*
*மாறவில்லை, கூற றியமாட்டவில்லை; ஓர்*
*பரிஷித்து வேண்டுமென்றார்—அதுவும்*
*பலத்துக்கு வரவில்லை, நலத்துடனே* 45
*புறமதப் பிரசாரம்—என்னும்*
*புற்றெழுந்து பல அங்கம் பற்றித் தின்பதால்*
*அறவழிந் தொழிகின்றவே—இதற்கொரு*
*ஆயுர்வேத மருந்தில்லை, அங்யமுமில்லை;* 46

(தொடரும்)

---

## தென்னிந்திய தமிழ்ச்சங்கம் திருநெல்வேலி
## தனித்தமிழ்த் தேர்வுகள்

இச்சங்கத்தார் கடந்த பதின்ரொண்டுகளாக நடத்தி வரும் தனித்தமிழ்த் தேர்வுகள் [(1) தமிழ்த்தேர்வு (2) இளந் தமிழ்ப் புலவர் (3) தமிழ்ப் புலவர் பொது (சிறப்பு) ஆகிய நால்வகைத் தேர்வுகளும்] இவ்யாண்டு ஆடித் திங்கள் கங, கச, கரு (1937-ஜுலை 28, 29, 30) புதன், வியாழன், வெள்ளிக்கிழமைகளில் சென்னை, ஆரணி, திருச்சி, திருநெல்வேலி, திருவனந்தபுரம், யாழ்ப்பாணம் ஆகிய சிறந்த தலைநகர்களில் தக்கார் மேற்பார்வையில் நடைபெறும். மேற்படி தேர்வுகளுக்கு விண்ணப்பங்கள் வந்து கொண்டிருக்கின்றன

தேர்வுகட்குப் பலவகை அறிஞர்களும் விண்ணப்பித்து எழுதித் தேர்ச்சியும் பரிசும் பெற்றுச் சிறக்க வேண்டுமென்ற நோக்கத்தினால், 1937 ஜூன்மீ 14உ வரை (ஆனித் திங்கள் வரை) விண்ணப்பங்கள் அனுப்பலாம் என்று தெரிவித்துக் கொள்கின்றேன். தேர்வும் இரண்டு மாதங்கழிந்து நடைபெற இருத்தலால், இதுவரை விண்ணப்பிக்காதிருப்பவர்களும் விண்ணப்பித்துக் கொள்ளச் சந்தர்ப்பம் கொடுக்கப்பட்டிருக்கிற தென்பதையும் அறிவித்துக்கொள்கின்றனன். தமிழாசிரியர்களும் பல மாணவர்களை அனுப்பித் தமிழ்க் கல்வியைப் போற்றி வளர்ப்பார்களாக.

பு. சி. புன்னைவனநாத முதலியார்.
அமைச்சர்

---

மாண்மிகு மன்னராம் ஆறும் ஜார்ஜ் மன்னருக்கும் அவர்தம் மனைவியார் எலிஸபெத் மகாராணியாருக்கும் சென்ற மேத்திங்கள் 12-ஆம் நாள் முடிசூட்டு விழா இலண்டனில் நடைபெற்றது. முடி மன்னரும் கோப்பெண்டும் நீடூழி வாழ்க.

* * *

அமெரிக்க நாட்டு மண்ணெண்ணெய் மன்னரும், உலகப்பெருங் கோடீஸ்வரர்களில் ஒருவருமான ஜான் டேவிஸன் ராக்ஃபெல்லர் என்ற வணிக மன்னர் சென்ற மேத்திங்கள் 23-ஆம் நாள் இவ்வுலக வாழ்வை நீத்தார். அவர் இறக்கும்போது அவருக்கு வயது 98.

* * *

சென்னைத் திருவள்ளுவர் திருநாட்கழகத்தினர் 1937-ஆம் ஆண்டு விழாவை இராமநாதபுரம் ஜில்லா பாகனேரி தனவைசிய இளைஞர் சங்க அழைப்பிற்கிணங்கிச் சென்ற மேத்திங்கள் 22-ஆம் நாள் பாகனேரியில் நடத்தினார்கள். கோவை வழக்கறிஞரும் பெரிய புராண உரைகாரருமாகிய திரு. C. K. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் தலைமை தாங்க, திரு. R. P. சேதுப்பிள்ளை, B. A., B. L. அவர்களும், பண்டிதர் A. நடராஜபிள்ளை அவர்களும் திருவள்ளுவர் சிறப்பைப்பற்றி சொற்பொழிவாற்றினார்கள். இவ்விழாவைப் பாகனேரியில் சிறப்புடன் நடத்திவைத்தற்கு முன்னின்று முயன்ற திரு. காசி விஸ்வநாதஞ்செட்டியார் அவர்களுக்குத் திருவள்ளுவர் திருநாட்கழகத்தினர்தம் நன்றி உரியதாகும்.

---

மிகவுங் குறைந்தவிலைப் பதிப்பு!　　　　　வெளிவந்து விட்டது!

# திருக்குறள் பரிமேலழகருரை

இதன்கண் ஆராய்ச்சி முன்னுரையும். பிற்சேர்க்கையாகத் திருக்குறட் பாயிரக்கருத்து, சில குறட்பாக்களுக்கு ஏனைய உரையாசிரியர் உரையும் விளக்கமும், அருஞ்சொற் பொருளகராதி, திருவள்ளுவ மாலை பொழிப்புரை முதலியனவும் சேர்க்கப்பெற்றிருக்கின்றன.

நூற்சிறப்பு உரைச்சிறப்புகட்கேற்ப இதுகாறும் திருக்குறள் பரிமேலழகர் உரைப்பதிப்பு இத்தகைய கையடக்கமான அளவில், இயன்றவரை பெரிய எழுத்துக்களில், கண் கவரும் உயர்ந்த கட்டடமுடையதாய், இவ்வளவு குறைந்த விலைக்கு யாராலும் பதித்துக் கொடுக்கப்பெறவில்லை என்பது இதனைப் பார்ப்பவர் நன்கு அறிவர்.

(1) வள்ளுவர் வண்ணப்படம் தாங்கிய பொன்னெழுத்திட்ட கலிக்காக் கட்டடமுடைய பிரதி ஒன்றுக்குக் குறைந்த விலை　ரூ. 1-14
மூன்று பிரதிகளுக்குக் குறைந்த விலை　ரூ. 5-0

(2) விலையுயர்ந்த ரெக்சைன் கட்டடம்: வட்டமூலை யுடையது. எட்டு விளிம்பு சிவப்புச் சாய மெருகு பெற்றது. இரண்டாந் தரப் பரிசுப்பதிப்பு பிரதி ஒன்றுக்கு விலை　ரூ. 3-8

(3) விலையுயர்ந்த ரேக்சைன் கட்டடம் மடிப்பு விளம்பும், வட்டமூலையுமுடையது. எட்டு விளிம்பு பொன்முலாம் கொண்டது. முதல்தரப் பரிசுப்பதிப்பு　விலை ரூ. 4-8

கம்பராமாயண சாரம்: அயோத்தியாகாண்டம்

பொழிப்புரை, குறிப்புரை, ஆராய்ச்சியுரை, கதைத் தொடர்ச்சியுடன். ஆசிரியர்: ராவ்சாஹிப் வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள்

ராப்பர் விலை ரூ. 1 6　　கலிக்கா விலை　1 12

துணபாடம் (Materia Medica)
வைத்தியரத்னம் C. S. முருகேச முதலியார் தொகுத்தது. அரசினர் பதிப்பு　5 8

பாரிகதை உரையுடன்
திரு. R. இராகவையங்காரவர்கள் இயற்றியது　2 0

நல்லுரைக் கோவை 2-பாகம்
டாக்டர் உ. வே. சாமிநாதையர் இயற்றியது.　1 8

16-ஆம் நூற்றாண்டுத் தமிழ்ப் புலவர் வரலாறு
திரு. S. சோமசுந்தர தேசிகர் எழுதியது　1 6

உயிரிளங்குமரன் நாடகம்
நவாலியூர் க. சோமசுந்தரப் புலவர் எழுதியது.　1 0

Dravidian & Aryan P. சிதம்பரம் பிள்ளை பி.ஏ.பி.எல். 0 12
The Right of Temple Entry　,,　1 0
ஆலயப்பிரவேச உரிமை (தமிழ்)　,,　0 5

(1) சிவாக்கிர யோகிகள் சிவநெறிப் பிரகாசம் உரையுடன் (சித்தாந்த நூல்)　1 10
(2) நானார்த்த தீபிகை நிகண்டு　6 8

குறிப்பு:—இவ்விரண்டும் திரு S அனவரத விநாயகம் பிள்ளையவர்கள், M. A., L. T., பதிப்பித்தன.

தலைமை நிலையம்: திருநெல்வேலி. } சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிமிடெட். 6, வளக்காரத்தெரு, சென்னை.